பாகம் 1

# விவிலியமும் வானியலும்

(வான ஜோதி மண்டலங்கள்)

பாகம் 2

# இப்பூமியில் தோன்றிய யுகங்களும், உலகங்களும்

பூர்ண வடிவுள்ள ஆல்சீயோனிலிருந்து (பரமண்டலம்) தேவன் பிரகாசிக்கிறார் சங் 50 : 2.

(தேவாதி தேவன்) பூமியை அந்தரத்திலே தொங்க வைத்திருக்கிறார் யோபு 26 : 7

விசுவாசத்தினாலே நாம், உலகங்கள் தேவனுடைய வார்த்தையினால், உண்டாக்கப்பட்டதென்றும் ....
.......... அறிந்திருக்கிறோம்! எபி 11 : 3

S. இராஜாமணி

ஆசிரியர்.

## இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் அன்பின் வாழ்த்துக்கள்

ஏறக்குறைய 7 ஆண்டுகளாக பல இடங்களிலிருந்து சேகரித்த சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பு வரை அச்சடிக்கப்பட்ட, ஆரோக்கிய உபதேசங்கள் அடங்கிய, கிறிஸ்தவ ஆவிக்குரிய புத்தகங்களை, பல மணி நேரம் கொடுத்து, பல இலட்சங்கள் செலவு செய்து மின் நூல்களாக (E-Books) இலவசமாக (மத்தேயு 10:8) உங்கள் கரங்களில் கொடுப்பதற்கு, அற்பரும் நீசருமான எங்களை பயன்படுத்தின உன்னத தேவனுக்கே சகல கனமும் மகிமையும் துதியும் உரித்தாவதாக. இதைப் போன்ற இன்னும் ஆயிரக்கணக்கான புத்தகங்களை தரவிறக்கம் (Download) செய்ய எங்களுடைய இணையதளத்தை சொடுக்கவும்/பார்க்கவும்: www.WordOfGod.in

95 சதவீத புத்தகங்கள் அச்சில் இல்லாதவைகளும், காப்புரிமை முடிந்தவைகளுமே. மீதமுள்ள புத்தகங்கள், நல்ல உபதேசங்களை கொண்டிருப்பதால், முடிந்தவரை ஆசிரியரின் உரிமையோடு மின்-நூலாக, இலவசமாக வெளியிடுகிறோம். ஒருவேளை உங்களுடைய புத்தகம் இப்படி இலவசமாக மின்-நூல் (E-Book) வடிவில் வரக்கூடாது என்று நினைத்தீர்களானால், தயவு செய்து எங்களை மன்னித்துக்கொள்ளுங்கள். எங்களுடைய WhatsApp எண்ணிற்கோ, மின் அஞ்சலிலோ (Email) எங்களுக்கு தெரியப்படுத்துங்கள். உடனடியாக எங்களுடைய இணைய-தளத்திலிருந்து எடுத்துவிடுகிறோம்.

WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599

Email: wordofgod@wordofgod.in

## *Wishing you in the mighty name of Jesus Christ*

*We had collected several thousands of old Tamil Spiritual Books which are rich in Sound Doctrines across various places of India for 7 years. Some of them are more than 200 years old books. We have spent millions of hours and money in scanning them and coverting them to E-Books. The work is still in progress. These E-books are published completely free of cost (Matt 10:8) forever. We give all the praise and glory to God for giving this wonderful opportunity to server Him. You can download thousands of similar Tamil Christian E-books from our website www.WordOfGod.in completely free of cost at any time.*

*95% of these E-Books are not being printed now and their copyrights are already expired. The remaining books are sent as E-Books mostly with the permission from the Authors. If you feel that your books should not be published as E-Book freely, kindly execuse and forgive us. Please let us know the book details by WhatsApp or Email we will remove them from our website.*

WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599

Email: wordofgod@wordofgod.in

## பாகம் 1

# விவிலியமும் வானியலும்

## வான ஜோதி மண்டலங்கள்

## பாகம் 2

# இப்பூமியில் தோன்றிய யுகங்களும், உலகங்களும்

❁ விசுவாசத்தினாலே நாம், உலகங்கள் தேவனுடைய வார்த்தையினால் உண்டாக்கப்பட்டதென்றும், இவ்வித மாய் காணப்படுபவைகள், தோன்றப்படுபவைகளால் உண்டாகவில்லை என்றும் அறிந்திருக்கிறோம் எபி 11 : 3.

❁ கர்த்தாவே யுகாயுகமாய் எம்துணை ஆயினீர்

❁ பரமண்டலங்களின் சக்கரத்திலே அவர் ( கர்த்தர் ) உலாவுகிறார் ( யோபு 22 :14 b )

தொடர்பு நூல்கள் : —

1. யார் இந்த ஜீவனுள்ள தேவனுடைய பிள்ளைகள்
2. காணமல் போன இஸ்ரயேல் வீட்டார்
3. பாலை வனப் புயல்
4. யார் இந்த இங்கிலாந்தியர்

ஆக்கியோன்
S. இராஜாமணி

விலை ரூ - 7

# நான் முகம்

தேவாதி தேவன், வானாதி வானங்களில் பிரகாசித்துக் கொண்டிருக்கிறார். அங்கிருந்து, உலகத்தையும், சர்வலோகங்களையும் ஆராய்ந்தறிகிறார். உத்தரமண்டலம் அல்லது ஆல்ஸியோஈன் என்ற மாபெரிய, பேரொளி பொருந்திய நட்சத்திரமே! அண்ட சராசரங்களையும் தன் ஈர்ப்பினால் இசைத்து அதன் அதன் அயனத்தில் இயங்கச் செய்கிறது.

அபிஜித் என்ற நமது சூரியனை விட மிகப் பெரிய நட்சத்திரத்தை, பல கோடி சூரியன்களும், அதன் கிரகங்களும் சுற்றிக்கொண்டேயிருக்கிறது. நமது சூரியன், அதை ஒரு தடவை சுற்றி வர 60 வருடங்கள் ஆகின்றன என்றும் ஒவ்வொரு வருஷத்திற்கும் ( தற்போது 1995 யுவ ) நமது முன்னோர் பெயரிட்டிருக்கிறார்கள்.

பேரண்டத்தில், நாம் எண்ண முடியாத, மனித அறிவுக்கு எட்டாத, பலகோடிக் கணக்கான நட்சத்திரங்களும் கிரகங்களும், பரமண்டலத்தை அல்லது ஆல்ஸியோனை சுற்றிக் கொண்டு வந்தாலும், ஒன்றையொன்று தாக்கிக் கொள்ளாமல் அதனதன் அயனத்தில் இயங்கிக் கொண்டிருக்கின்றன. கர்த்தர் (தேவன்) சொல்ல ஆகும்! அவர் கட்டளையிட நிற்கும்!! என்பது தேவ கட்டளை. காரிருளையும் பல கிரகங்களில் தேவன் வைத்திருக்கிறார். ஏசா 50:3 சந்திரனில் மறுபக்கம் இருள் என்பதைக் காண்க.

இவ்விதமாக வான ஜோதிகள் இருக்கின்ற வான வெளியை, ''ஆகாய மண்டலம்'' என்று திருமறை அழைக்கிறது. ஆகாய மண்டலம் முழுவதும் 'சாத்தான்' சுற்றித் திரிந்து கொண்டிருக்கிறான். ஆகாய மண்டலத்திலுள்ள பொல்லாத ஆவிகளோடும் நமக்குப் போராட்டமுண்டு என்று வேதம் கூறுகிறது.

பரிசுத்தபவுல் அப்போஸ்தலன் மூன்றும் வானமட்டும் சென்றேன் என்கிறார். 1ம் வானம் சூரிய மண்டலம், 2ம் வானம் அண்டம் (அபிஜித் மண்டலம்) 3ம் வானம் பேரண்டம் (ஆல்ஸீயோன் பரமண்டலம்). பவுல் கிறிஸ்துவின் கிருபையினால் தேகத்தை விட்டுப் பிரிந்து ஆவியிலே மூன்றும் வானம் மட்டும் போய் வந்தார் என்பது திருமறையின் கூற்று.

கர்த்தராகிய தேவன் பூலோகத்தின் மக்களை இரட்சிக்குப்படி உன்னதத்திலிருந்து (ஆல்ஸீயோன்) இறங்கி 3 மண்டலங்களையும் கடந்து பூலோகம் வந்து, மனிதனானர். மனிதனான தேவன் இயேசு கிறிஸ்துவாக 33½ வருஷம் இப்பூமியில் வசித்து தாம் வந்த நோக்கத்தை (மனித இரட்சிப்பு) முடித்தார். பின் மரித்து, உயிர்த்து, பாதாளத்தில் இறங்கி அங்கும் இரட்சிப்பின் பணியை முடித்துக் கொண்டு பூலோகத்தில் 40 நாட்கள் தங்கி, தாம் ஜீவனோடிருப்பதை காண்பித்து, பிதாவிடம் பரலோகஞ் சென்றார்.

தேவசித்தத்தின் படியும், தாம் திருவாய் மலர்ந்தருளிய படியும், சீக்கிரம் இப்பூலோகத்திற்கு வந்து திருச்சபையை அழைத்துக் கொண்டு, பரலோகம் சென்று, தாம் ஆயத்தஞ்செய்திருக்கும் ஸ்தலத்தில் அமர்த்துவார் என்று விசுவாசத்துடன் காத்திருப்போம்! ஆமென்

அன்புநகர்,
ஆள்வானேரி,
6 - 11 - 95.

S. இராஜாமணி
உபா.

# 1 பேரண்டம்

பரமண்டலங்களின் சக்கரத்திலே தேவன் உலாவுகிறார். யோ 22:14

வானங்கள் தேவனுடைய மகிமையை வெளிப்படுத்துகிறது. சங் 19:1

என் (கர்த்தர்) வலது கை வானங்களை அளவிட்டது. நான் அவைகளுக்குக் கட்டளையிட, அவைகள் அனைத்தும் நிற்கும். ஏசாயா 14:13

பூர்ண வடிவுள்ள ஸீயோனிலிருந்து, தேவன் பிரகாசிக்கிறார். சங் 50:2

வடக்கேயிருந்து பொன் மயமான (உன்னதம்) காந்தி வருகிறது.

யோபு 37:21 இப்போதும் காற்று வீசி, ஆகாய மண்டலத்திலுள்ள மப்பு நீங்கப் பண்ணியிருக்கிற சமயத்தில், வடக்கேயிருந்து பொன் மயமான காந்தி வருகிறபோது;

வானங்களை ஞானமாய் உண்டாக்கினவரைத் துதியுங்கள். சங் 136:5

வானாதி வானங்களே கர்த்தரைத் துதியுங்கள் சங் 148:4

உன்னதம்: ஸீயோனைச் சுற்றி உலாவி, அதின் கொத்தளங்களை எண்ணுங்கள். சங் 48:12

வடதிசையிலுள்ள சீயோன் பர்வதம் வடிப்பான் ஸ்தானம், சர்வ பூமியின் மகிச்சியுமாயிருக்கிறது; இதுவே மகா ராஜாவின் நகரம்' யோபு 48:2

இயேசு கிறிஸ்து எல்லா வானங்களுக்கும் மேலாக உன்னதத்திற்கு ஏறினவருமாயிருக்கிறார். ாபே 4:10

# 2. அண்டம்

நீர் (கர்த்தர்) வானங்களையும், வானாதி வானங்களையும், அவைகளுடைய சர்வ சேனைகளையும், பூமியையும் உண்டாக்கினீர். நெகே 9.6

மகிமையிலே நட்சத்திரத்திற்கு நட்சத்திரம் விசேஷித்திருக்கிறது. Iகொரி 15:41

வானங்கள் கர்த்தருடையது; பூமியையோ மனுப்புத்திரருக்குக் கொடுத்தார். சங் 115:16

வானம் எனக்கு சிங்காசனம்; பூமி எனக்குப் பாதபடி,
ஏசா 66:1

அவர் (கர்த்தர்) துருவச் சக்கர நட்சத்திரங்களையும், மிருக சிரீஷத்தையும், அறுமீன்களையும், தட்சண மண்டலங்களையும் உண்டாக்கினவர். யோபு 9 9

கர்த்தர் நட்சத்திரங்களின் இலக்கத்தை எண்ணி, அவைகளுக்கெல்லாம் பேரிட்டு அழைக்கிறார் சங் 147:4

வானங்களின் வழியாய் பரலோகத்திற்குப் போன, தேவ குமாரனாகிய இயேசு என்னும் மகா பிரதான ஆசாரியர் நமக்கு இருக்கிறார். எபி 4:14

நான் (கர்த்தர்) பூமியை உண்டு பண்ணினேன், என் கரங்கள் வானங்களை விரித்தன

# 3. சூரிய குடும்பம்

கர்த்தர் வானங்களிலிருந்து, பூமியின் மேல் கண்ணோக்கமாயிருக்கிறார். சங் 102:20

பெரிய சுடர்களை உண்டாக்கினவரைத் துதியுங்கள்
சங் 136:2

வானத்தைத் தேவன் தமது பேரறிவினால் விரித்தார்
எரே 5:15

கர்த்தர் பூமியை அந்தரத்திலே தொங்க வைக்கிறார்.
யோபு 26:57

தேவன் பூமி உருண்டையின் மேல் வீற்றிருக்கிறார்.
ஏசா 40:22

அது(வானம்) பூமியை ஆளும், ஆளுகையை நீ திட்டம் பண்ணுவாயோ?

நான் வானங்களுக்கு மறு மொழி கொடுப்பேன்; அவைகள் பூமிக்கு மறு மொழி கொடுக்கும் ஓசியா 2:21

பூமியின் குடிகளே, எல்லாரும் கர்த்தரை கெம்பீரமாய் பாடுங்கள் சங் 100:1

பிரார்த்தனை

பிதாவே, வானத்திற்கும் பூமிக்கும் ஆண்டவரே, இவைகளை ஞானிகளுக்கும், கல்விமான்களுக்கும் மறைத்து பாலகருக்கு வெளிப்படுத்தின படியால் உம்மை ஸ்தோத்தரிக்கிறேன். ஆமென் மத் 11:25.

அத்தாட்சிகள்:-

1 விவிலிய நூல் (பைபுள்) தேவனாகிய கர்த்தர்.
2 தின மணி சுடர் - 15.8 82 உலக விஞ்ஞானிகள்.

## பாகம் 1

# விவிலியமும் வானியலும்

## வான ஜோதி மண்டலங்கள்

ஆதியிலே கர்த்தராகிய தேவன் வானத்தையும், பூமியையும் படைத்தார். ஆதி என்பது மனிதனால் கணக்கிட முடியாத ஆண்டுகளாக நாம் கருதலாம். 1000 ஆண்டுகள் தேவனுக்கு ஒரு நாள்.

வானியிற்பியல் நிபுணர்கள் நமது பூமி உருவாகி சுமார் 450 கோடி ஆண்டுகள் ஆகிறது என்கிறார்கள். மனிதன் தன் அறிவாற்றலினாலும், வானியல் நிபுணர்களின் அனுபவத்தாலும் இப்படி கூறுகிறார்கள்.

வானாதி வானங்களே கர்த்தரைத் துதியுங்கள் சங் 148:4. வானமும், வானங்களும் கர்த்தரைத் துதிக்கக்கடவர்கள். வானங்களை ஞானமாய் உண்டாக்கியவரைத் துதியுங்கள் சங் 136: 5

சிருஷ்டிப்பில் தேவன் 4 ம் நாளில் சுடர்களையும், நட்சத்திரங்களையும் உண்டாக்கினார். நாம் இரவில் காணும் கோடா கோடி நட்சத்திரங்களையும் தேவன் உண்டாக்கினார். கர்த்தர் ஒருவரே வானங்களை விரித்தார். யோபு 9: 7 பரமண்டலங்களின் சக்கரத்திலே தேவன் உலாவுகிறார் யோபு 22: 14

அறிவியலாரும், வானியியல் நிபுணர்களும் பெரிய தொலை நோக்கிகள் (ரேடியோ டெலஸ் கோப்) மூலமாய் அறிந்த கருத்துக்களையும், ஆராய்ச்சியின் மூலமாய் தெரிந்து கொண்ட உண்மைகளையும் வெளியிடுகிறார்கள். அவையாவன:-

மனிதனால் அளவிடப்பட முடியாத மிக மிகப் பெரிய ஓர் உருண்டையிருந்தது. அதன் திறன் என்ன எப்படி உரு

வாகிற்று என்பது தெரியாது. இம்மாப் பெரிய உருண்டை யின் உள்ளே மிகக் கடுமையான ஈர்ப்பு - ஆற்றல் செயல் பட்டு வந்தது. ஏன், எதற்கு என்பதும் தெரியாது. அந்த உருண்டையின் உள்ளே அழுத்தம் மென்மேலும் மிருந்த அந்த அழுத்தத்தின் மிகுதியினால் வெப்பம் ஏற்பட்டது.

வெப்பமும், அழுத்தமும் பேரளவாக மிகுந்ததால், அந்த உருண்டை 'படார்' என்று வெடித்தது. வெடிப்பை அறிவியிலார் ''மாபெரும் வெடிப்பு'' (Big Bank) என்று கூறு கிறார்கள் இந்த மாபெரும் வெடிப்பால் உருண்டை யில் அடங்கியவை அனைத்தும் மிக மிக வேகமாக நாலா பக்கமும் சிதறுண்டன. அப்படி சிதறுண்ட பகுதிகள், இன் னும் பல பகுதிகளாக சிதறி அப்பாற் பட்டுக் கொண்டு வருகின்றன. ரேடியோ டெலஸ்கோப் முதலிய கருவி களால் இந்த விபரங்கள் தெளிவாகத் தெரிகின்றனவாம்.

## 1 பேரண்டம்
## UNIVERSE

மாபெரும் உருண்டை 'படார்' என்று வெடித்ததின் விளைவாக சிதறி விரிந்தத் தொகுதியே ''பேரண்டம்'' என்று அழைக்கப் படுகிறது. பேரண்டத்திற்குள் பல கோ டிக் கணக்கான தொகுதிகள் உண்டாயின. பேரண்டத்தின் மத்தியில் அமைந்துள்ள ''மாபேரொளிமிகுந்த'' ஓர் பொன் மயமான காந்தியின் ஜோதி காணப்படுகிறது.

**விவிலிய நூலில்:-**

1 வடக்கேயிருந்து பொன் மயமான காந்தி வருகிறது. யோபு 37: 21

2 பூர்ண வடிவுள்ள சீயோனிலிருந்து தேவன் பிரகாசிக் கிறார். சங் 50. 2

3 வட திசையிலுள்ள சீயோன் பர்வதம் வடிப்பான ஸ்தானமும், சர்வ பூமியின்மகிழ்ச்சியுமாயிருக்கிறது. அதுவே மஹா ராஜாவின் நகரம் சங் 48: 2

4 சீயோனைச் சுற்றி உலாவி அதின் கொத்தளங்களை எண்ணுங்கள் சங் 48:12

5 ஒளியை வஸ்திரமாகத் தரித்து வானங்களைத் திரையைப் போல் விரித்திருக்கிறார் சங் 104: 2

ஆகவே தேவனாகிய கர்த்தர் பேரண்டத்தின் மத்தியிலே 'மாபேரொளி மிகுந்த' ஸ்தலத்திலே வசிக்கிறார் அதுவே 'பரலோகம்' அல்லது 'உன்னதம்' எனப்படும். இப்பரலோகத்தை வானியல் நிபுணர்கள் "ஆல்ஸீயோன்" என்று அழைக்கிறார்கள். இதுவே பேரண்டம்.

## 2 அண்டம்

## GALEXY

மாபெரும் உருண்டை வெடித்ததினால் விரிந்து சிதறிய பல கோடி தொகுதிகளில் நமது அண்டம்; இந்த அண்டத்தினின்றும் சிதறிய பல கோடிப் பகுதிகளும், பல கோடிக் கணக்கான சிறியபெரிய சூரியன்களாகக் காணப்படுகிறது இவைகளையே நாம் இரவில் கோடிக் கணக்கான நட்சத்திரங்களாகப் பார்க்கிறோம். இந்த நட்சத்திரங்களுக்கு மத்தியில் காணப்படும் தொகுதியே ''ஒரு மாபெரும் நட்சத்திரம்'' இந்த நட்சத்திரத்தை வானியல்பு நிபுணர்கள் ''ஆபிஜித்''என்று அழைக்கிறார்கள்.

இந்த மாபெரும் நட்சத்திரத்தில் 10 ஆயிரம் கோடிடன் தங்கம் இருக்கிறதாகச் சொல்லுகிறார்கள். , அபிஜித், என்ற இந்த மாபெரும் நட்சத்திரத்தை நமது சூரியனுடன் கூடிய, பல கோடி சிறிய பெரிய நட்சத்திரங்களும் (சூரியன்களும்) சுற்றிக் கொண்டு வருகின்றன. அபிஜித் நட்சத்திரத்தை நமது சூரியன் ஒரு தடவை சுற்றி வர 60 வருடங்கள் ஆகின்றன. இதுவே தமிழ் ஆண்டுகள் 60 ஆகும்

பைபுள் கூறுவதென்ன?

1 கர்த்தர் நட்சத்திரங்களின் இலக்கத்தை எண்ணி, அவைகளுக்கு பேரிட்டு அழைக்கிறார் சங் 147: 4

2 கர்த்தர் வானங்களையும், வானாதி வானங்களையும். அவைகளுடைய சர்வ சேனைகளையும், (பல கோடி நட்சத்திரங்கள்) பூமியையும் ......... உண்டாக்கினார். நெகே 9:6

3 வானங்களின் வழியாய் பரலோகத்திற்குப் போன தேவ குமாரனாகிய இயேசு கிறிஸ்து என்னும் மகா பிரதான ஆசாரியர் நமக்கு இருக்கிறார் எபி 4.14

4 என் (கர்த்தர்) வலதுகை வானங்களை அளவிட்டது நான் அவைகளுக்குக் கட்டளையிட அவைகள் அனைத்தும் (ஓடிக் கொண்டிருப்பவை) நிற்கும் ஏசா 48:13

5 மகிமையிலே நட்சத்திரத்திற்கு நட்சத்திரம் விசேஷித்திருக்கிறது 1கொரி 15:41 இவ்வாறு வேதம் கூறுகிறது. இதுவே அண்டமாகும்.

## 3 சூரிய குடும்பம்
## SOLAR FAMILY

மாபெரும் நட்சத்திரமாகிய அபிஜித் என்ற மிகப் பெரிய சூரியனைச் சுற்றி, பெரிதும் சிறிதுமாகிய பல கோடி நட்சத்திரங்கள் ஓடுகின்றன. அவைகளில் ஒன்று தான் நமது சூரியனான நட்சத்திரத்தின் மூலமாக நாம் ஒளியையும் வெப்பத்தையும பெறுகிறோம்.

இந்த நட்சத்திரத்தை சுற்றி 10 கிரகங்கள் அல்லது கோளங்கள் சுற்றி வருகின்றன. புதன், வெள்ளி, பூமி செவ்வாய், வியாழன், சனி, சிரோன், யுரேனஸ், நெப்டியூன் ,புளூட்டோ, ஆகியவை.

இதில் பூமி என்ற கிரகத்தில் நாம் வசிக்கிறோம். பூமியைச் சுற்றி சந்திரன் என்ற உபகிரகம் சுற்றி வருகிறது. இதேப் போல் எல்லாக் கிரகங்களையும் ஒன்று, அல்லது அதற்கு மேற்பட்ட உபகிரகங்கள் சுற்றி வருகின்றன. எல்லா கிரகங்களும் சூரியனையே சுற்றி ஓடிக்கொண்டிருக்கின்றன.

| கிரகங்கள் | (சூரியன்) | சுற்று | |
|---|---|---|---|
| 1. புதன் | Mercury | 88 | நாட்கள் |
| 2. வெள்ளி | venus | 225 | ,, |
| 3. பூமி | Earth | 365 | ,, |
| 4. செவ்வாய் | Mars | 678 | ,, |
| 5. வியாழன் | Jupitor | 12 | வருடம் |
| 6. சனி | Saturn | 19½ | ,, |
| 7. சிரோன் | siron | 35 | சுமார் ,, |
| 8. யூரேனஸ் | uranus | 84 | ,, |
| 9. நெப்டியூன் | Neptune | 164½ | ,, |
| 10. புளூட்டோ | pluto | 248 | ,, |

இந்த கிரகங்களையும், சகல கோடி நட்சத்திரங்களையும் வானங்கள் என்றே அழைக்கிறோம். விவிலிய நூலில் இவைகளைப் பற்றி கூறுவதென்ன?

1. வானத்தை தேவன் தமது பேரறிவினால் விரித்தார் ஏரே 5·15

2. அது (வானம்) பூமியை ஆளும் ஆளுகையை நீ திட்டம் பண்ணுவாயோ? யோபு 38: 33

3. நான் (கர்த்தர்) வானங்களுக்கு மறு மொழிக் கொடுப்பேன்; அவைகள் பூமிக்கு மறுமொழிகொடுக்கும ஓசியா 2 : 21

4. (கர்த்தர்) வானங்களிலிருந்து பூமியின் மேல் கண்ணோக்கமாய் இருக்கிறார் சங் 102:20

5. நான் (கர்த்தர்) பூமியைஉண்டு பண்ணினேன்; என் கரங்கள் வானங்களை விரித்தன. கர்த்தருடைய வார்த்தையினால் வானங்களும், அவருடைய வாயின் சுவாசத்தினால், அவைகளின் சர்வ சேனையும் உண்டாக்கப் பட்டது சங் 33:6

6. இயேசு கிறிஸ்து எல்லா வானங்களுக்கும் மேலாக உன்னதத்திற்கு ஏறின வருமாயிருக்கிறார். எபே 4: 1

இவ்வாறாயிருக்க சூரிய குடும்பமும் அண்டம், பேரண்டம் ஆகியவற்றிலுள்ள சகல கோடி நட்சத்திரங்களும், உன்னதத்தை அல்லது ஆல்ஸியோனை பரமண்டலத்தை சுற்றிக் கொண்டே வருகின்றன.

பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே! உம்முடைய நாமம் பரிசுத்தப் படுவதாக; உம்முடைய நாமத்தை துதிக்கிறோம் என்று ஆராதிக்கிற நாம் இரவிலும் பகலிலும் காணப்படும் சகல கோடி நட்சத்திரங்களையும் உருவாக்கிய தேவன் இப்பூமிக்கு வந்திருந்த போது! "என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு; ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக (பூமியிலுள்ள மக்களுக்காக) ஆயத்தம் பண்ணப் போகிறேன். யோவா 14:2

2. நான் மறுபடியும் வந்து உங்களை என்னிடத்தில் சேர்த்துக் கொள்வேன். யோ 14:3 என்றார்.

இந்த வாக்குத்தத்தத்தை எதிர் நோக்கியிருக்கும் நாம் வானுலகங்களின் அமைப்பை, "அறிவுப் பெருகிப்போம" என்ற இயேசு கிறிஸ்துவின் தீர்க்கவுரையினால் ஓரளவு அறிந்து கொண்டோம். கிறிஸ்துவின 2ம வருலகையை எதிர் பார்த்திருக்கும் நாம், சொலலளவை விடடு வட்டு கிறிஸ்துவின சிநதையோடும ஆயத்தமாய் இருப்போமாக

கர்த்தாவே! மனுஷனை நீர் கவனிக்கிறதற்கும், மனுப் புத்திரனை நீர் எண்ணுகிறதற்கும் அவன் எம்மாத்திரம்! சங் 144:3

பிதாவே!! வானத்திற்கும், பூமிக்கும் ஆண்டவரே!!! இவைகளை ஞானிகளுககும், கல்விமான்களுக்கும் மறைதது, பாலகருக்கு வெளிப்படுத்தின படியால் உமமை ஸ்தோத்தரிக்கிறோம். மத் 11:25

## வான ஜோதி மண்டல சூழர்ச்சி

1 சந்திரன் தன்னை தான் சுற்றி பூமியையும் சுற்றி வருகிறது.

2 பூமி தன்னைத் தான் சுற்றி சந்திரனுடன் சூரியனையும் சுற்றி வருகிறது.

3 சூரியன் தன்னைத் தான் சுற்றி பூமி மற்றும் கிரகங்களுடன் அபிஜித் என்ற மகா பெரிய நட்சத்திரத்தை சுற்றி வருகிறது. சூரியன்கள் 15 கோடி

4 அந்த அபிஜித் என்ற மகா பெரிய நட்சத்திரம் தன்னை தான் சுற்றிக் கொண்டு 15 கோடி சூரியன்களையும் அதன் கிரகங்களுடனும் மகாப் பேரொளி பொருந்திய ஆல்ஸியோன என்ற மகாப் பிரமாண்டமான நட்சத்திரத்தை சுற்றி வருகிறது. அபிஜித் போன்ற மகாப் பெரிய நட்சத்திரங்கள் 10 கோடி

5 ஆல் ஸியோன் என்ற பிரமாண்ட மான பேரொளியுள்ள நட்சத்திரம் தன்னைத் தான் சுற்றி கொண்டு வருகிறது இதனை 10 கோடி அபிஜித் போன்ற மகா பெரிய நட்சத்திரங்களும், அவைகளுடைய சூரியன்கள் 15 கோடியும் சுற்றி வருகின்றன.

1 சகல பிரகாசமுள்ள நட்சத்திரங்களே கர்த்தரை துதியுங்கள்.

2 வானாதி வானங்களே அவரைத் துதியுங்கள்.

3 மாறுதப் பிரமாணத்தை அவைகளுக்கு நியமித்தார்.

## வான ஜோதி மண்டலம்

1 ஏசாயா 48:13 என் (கர்த்தர்) தாமே பூமியை அஸ்திப்
பாரப்படுத்தி, என் வலது கை வானங்களை அள
விட்டது; நான் அவைகளுக்கு கட்டளையிட அவை
கள் அனைத்தும் நிற்கும்.

2 சங்கீதம் 19:1-5 வானங்கள் தேவனுடைய மகிமையை
வெளிப்படுத்துகிறது. ஆகாய விரிவு அவருடைய
கரங்களின் கிரியையை அறிவிக்கிறது் ——— அவை
களில் சூரியனுக்கு ஒரு கூடாரத்தை ஸ்தாபித்தார்
அது தன் மணவறையிலிருந்து புறப்படுகிற மணவா
ளனைப் போலிருந்து, தன் பாதையில் ஓட மகிழ்ச்சி
யாயிருக்கிறது.

## ஓர் பேரறிவுரை

தேவனாகிய கர்த்தர் வான மண்டல ஜோதிகளை இவ்வித விநோதமாகவும், அற்புதமாகவும் சிருஷ்டித்து ஆகாயமண்டலத்திலே அவைகள் தங்கள், தங்கள் அயனத்தில் கோடாக்கோடி வருடங்களாக இயங்கிக் கொண்டிருப்பதை மனுக்குலம் கண்டு அறிந்து பிரமித்து, தேவனை அறிந்தோர் மகிழ்ந்து கர்த்தரைத் துதித்து கொண்டிருக்கிறார்கள்

ஓ. கிறிஸ்தவனே, அதிசயமான வான மண்டல ஜோதிகளைக் காண்கிறவனே, உன் தேவனாகிய கர்த்தரின் நாமத்தை ஏன் மறந்து போகிறாய்? அவர் நாமம் என்ன? உன்னை இரட்சித்தாரே அவர் யார்? அவரே உன் இரட்சகராகிய இயேசு கிறிஸ்து.

தேவப் பிள்ளையே ஆதி கிறிஸ்தவ மிஷனெரிமார் உனக்கு இயேசு கிறிஸ்து என்னும் ஞானப் பாலையூட்டி, உன்னைக் கண்ணும் கருத்துமாய் வளர்த்தார்கள் அல்லவா அவர்கள் பட்ட கஷ்டங்கள் என்ன? அவர்கள் அடைந்த துன்பங்களென்ன? இப்போது நீ கடவுள் என்னும் குளிர்ந்த நீரை உட்கொண்டு, கடவுள் கடவுள் என்று உன் கர்த்தரின் நாமத்தை கூறுவதென்ன?

கடவுள் என்ற சொல்லா உன்னை உயர்த்திற்று? உன் மூதாதையர் ஆயிரக்கணக்கான வருடங்களாய் கடவுள், கடவுள் என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள்? என்ன மேன்மையை அடைந்தார்கள்?

இல்லை, இல்லை, "இயேசு கிறிஸ்து" என்னும் தேவ நாமம் உன்னை உயர்த்திற்று உனக்குக் கல்வியைக் கொடுத்தது யார்? இயேசு கிறிஸ்து என்னும் திரு நாமம் அல்லவா! அவரே உன்னை பாவத்தினின்று இரட்சிக்க வந்த தேவனாகிய கர்த்தர் தேவன் என்ற சொல் உன் மொழியில் கடவுள் என்று அர்த்தப் பட்டாலும், அன்றுஇயேசு கிறிஸ்து என்ற ஞானப் பாலைத் தான் மிஷனெரிமார்கள் ஊட்டினார்கள் கடவுள் என்ற சொல் உன் வேதாகமத்தில்

உண்டா? பின் ஏன் உன் நாவு தேவன் என்ற நாமத்தை கடவுள் என்று உச்சரிக்கிறது' இது அந்தி கிறிஸ்துவினால் உண்டாகும் ஆபத்து.

உனக்கு முன் காணப்படுகிறவன் அன்று கோவில் என்றான, இன்று ஆலையம் என்கிறான், அன்று கடவுள் என்றான், இன்று இறைவன், ஆண்டவன் என்கிறான் உன் அறிவும் ஞானமும் எங்கே போயிற்று?

இப்போது நாம் அந்தி கிறிஸ்துவின் காலத்திலிருக்கிறோம், என்பதை யூதசாம் ராஜ்யமும் எப்ராயீமரின் இரட்சிப்பின் சுவிசேஷமும் நமக்கு சுட்டிக் காட்டுகிறது. நாகரிகம் என்னும் வலைக்குள் நாம் அகப்பட வேண்டாம், உன் தேவன் அருட் செய்த வேதாகமத்திற்குள் நுழைந்து கொள். அப்போது அந்திக்கிறிஸ்துவின் ஆட்சிக்கும் நயவஞ்சகத்திற்கும் நாம் தப்பித்துக் கொள்வோம்.

தேவ ஊழியக்காரரே, உங்கள் வார்த்தையிலும், பேச்சிலும், வேத உரையிலும், உங்கள் கடிதங்களிலும், பத்திரிக்கைகளிலும், கடவுள் என்னும் சொல்லை புறப்பே அகற்றுங்கள் இயேசு கிறிஸ்து என்ற நாமம் உங்கள் வாயிலிருந்து வரும் வார்த்தைகளிலும், உபந்நியாசங்களிலும், ஜெபங்களிலும் உபதேசங்களிலும் தொனித்து யெகொவாவின் நாமத்திற்கு மகிமையை உண்டாக்குங்கள். தேவன் கர்த்தர் என்ற நாமம் ஒலிக்கட்டும்.

ஓ! கிறிஸ்தவனே, மேற்குத் திசை ஜெருசலேமை நோக்கி யோடி, கல்வாரி செந்நீரூற்றில் மூழ்கவேண்டிய நீ கிழக்கில் ஆதவன் உதிக்கும் திசை நோக்கி யோடி, அங்கு ............ அடைந்து வங்கக் கடலில் ஆழ்ந்து விடாதே கடவுள் என்ற செல்லை அகற்றி, இயேசு கிறிஸ்துவில் நிலைத்திரு; அந்தி கிறிஸ்து அண்மையில் நிற்கிறான்; அவனுக்கு அஞ்சாதே; உன் தேவனாகிய இயேசு கிறிஸ்து உன் பக்கத்தில் துணையாக நிற்கிறார்!

S. இராஜாமணி

## பாகம் 2

# இப்பூமியில் தோன்றிய

# யுகங்களும், உலகங்களும்

1 தேவாதி தேவன் பூமியை அந்தரத்திலே தொங்க வைத்திருக்கிறார், யோபு 26 : 7

2 பாவிகளை இரட்சிக்க கிறிஸ்தேசு உலகத்தில் வந்தார்.

3 உங்கள் எதிராளியாகிய பிசாசானவன், கெர்ஜிக்கிற சிங்கம் போல் எவனை விழுங்கலாமோ வென்று வகை தேடிச் சுற்றித் திரிகிறான். I பேது 5 : 8B

4 விசுவாசத்தில் உறிதியாயிருந்து அவனுக்கு ( சாத்தான் ) எதிர்த்து நில்லுங்கள் I பேதுரு 5 : 9 A

5 வருகின்றவர் (இயேசுகிறிஸ்து) இன்னும் கொஞ்சகாலத்திலே வருவார் தாமதம் பண்ணார். எபி 10 : 37

6 நான் (இயேசு கிறிஸ்து) உங்களை திக்கற்றவர்களாக விடேன்; உங்களிடத்தில் வருவேன்.

# இப்பூமியில் தோன்றிய யுகங்களும் உலகங்களும்

1 கர்த்தாவே யுகாயுகமாய் எம்துணை ஆயினீர்.

2 பரமண்டலங்களின் சக்கரத்திலே அலவர் (கர்த்தர்) உலாவுகிறார். யோபு 22 : 14 B

3 என்னைத் (இயேசு) தொட்டது யார்? மகளே உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது. நீ சமாதானத்தோடு போ!

4 பயப்படாதே விசுவாசமுள்ளவனாயிரு; பிள்ளையே எழுந்திரு என்றார், இயேசு! அவள் உயிர் திரும்ப வந்தது லூக் 8 : 50-55

5 நீங்கள் உலகமெங்கும், சர்வசிருஷ்டிக்கும், சுவிசேஷத்தை அறிவியுங்கள். மாற்கு 16 : 15

6 இதோ, உலகத்தின் முடிவுபரியந்தமும், நான் உங்களோடு கூடயிருக்கிறேன்.

# நூன்முகம்

வானங்கள் தேவனுடைய மகிமையை வெளிப்படுத்து கிறது! வானங்கள் என்பது, நமது சூரிய, சந்திர, கிர கணங்கள், மற்றும் நாம் காணும் பலகோடி நட்சத் திரங்கள். இந்த வானங்களில் ஒன்று தான் நாம் வசிக்கும் பூமியாகும்! திருமறை இதைத் தெளிவுபடுத்துகிறது. மனுஷனை நீர் நினைக்கிறதற்குப், மனுஷ குமாரனை நீர் விசாரிக்கிறதற்கும், அவன் எம்மாத்திரம். நீர் (கர்த்தர்) அவனை தேவ தூதரிலும் சற்று சிறியவனாக்கினீர்; மகிமையினாலும், கனத்தினாலும அவனை முடிசூட்டினீர். சங் 84:5

நான் வானத்திற்கு ஏறினாலும் நீர் அங்கேயிருக் கிறீர்; நான் பாதாளத்தில் படுக்கைப்போட்டாலும். நீர் அங்கேயுமிருக்கிறீர். சங் 139:8 என்ற திருமறைவாக் கிலிருந்து பரலோகம், பாதாளலோகம் இருக்கிறதென்பது தெளிவாகிறது அவன் இரண்டாயிரம் வருஷம் பிழைத் திருந்தாலும் ஒரு நன்மையும் காண்பதில்லை. பிரசங்கி 6:6 முன் இருந்ததே இனிமேலும் இருக்கும்; முன் செய்யப் பட்டதே பின்னும் செய்யப் படும். பிரசங்கி 1:9 நடந்த தையோ தேவன் விசாரிப்பார். பிரசங்கி 3:15

ஒரு நாள் தேவ புத்திரர் கர்த்தருடைய சந்நதியில் வந்து நின்ற போது, சாத்தானும் அவர்கள நடுவில வந்து நின்றான். யோபு 1:6 தேவனாகிய கர்த்தர் வார்த்தை யினால் சிருஷ்டித்த மக்கள் எங்கே? அவர்களை வேறோர் கிரகத்திலோ நட்சத்திரத்திலோ குடியமர்த்தியிருக்க வேண் டுமல்லவா அவர்களே "தேவ புத்திரர்" எனப் பட்டார்கள் சாத்தான் அவர்களை இவ்வுலகத்திற்கு அழைத்து வந்து மனிதப் பெண்களோடு கலக்கப் பண்ணி இவ்வுலகத்தில் வசிக்கப் பண்ணினார். இவர்கள மூலமாய் உண்டாகிய

சந்ததியே, நம் இந்திய இதிகாசங்களில் காணப்படு
தேவர்கள், சுரர்கள், அசுரர்கள் நரர்கள் இராட்சதர்கள்

இவர்கள் நீண்ட ஆயுசுடன் வாழ்ந்ததாலும், மனி
செயல் பாட்டிற்கு மிஞ்சிய செயல்கள் புரிந்ததாலு
சாத்தான் மூலம் பல வரங்களைப் பெற்று சாவா நிலை
கொண்டவர்கள் என்றும் எண்ணப் பட்டார்கள் அதனா
'யுகங்கள்' என்னப்பட்ட மனிதர் கணக்கில் அடங்கா
ஆண்டுகளாயிற்று!

இந்த யுகங்களையும், மனிதர் கணக்கில் அடங்கி
உலகங்களையும், தேவனாகிய கர்த்தர், மனித சிந்தனைக்கு
தமது திருமறையின் மூலமாய் தெளிவு படுத்தச் சித்த
கொண்டார்.

காதுள்ளவன் கேட்கக் கடவன்!

சிந்தனையுள்ளவன் அறியக் கடவன்!!

கர்த்தாவே! யுகயுகமாய் எம்துணை ஆயினீர்

ஆயிரம் ஆண்டு உமக்கு
ஓர் நாளைப் போலாமே
யுகங்கள் தேவரீருக்கு
ஓர் இமைக் கொப்பாமே!

கர்த்தாவே! யுகயுகமாய், எம்துணை ஆயினீர்!!

ஆள்வானேரி
1 - 9 - 95

ஆக்கியோன்
S. இராஜமணி
அன்புநகர்
ஆள்வானேரி

## இப்பூமியில் உண்டான யுகங்களும் உலகங்களும்

# 1 மோட்சயுகம்

ஆதியிலே தேவன் வானத்தையும், பூமியையும் சிருஷ்டித்தார் ஆதி1:1 இப்பூமி உருவாகி 450 கோடி வருஷங்கள் ஆகிறது என்று உலகஅறிவியலார் கூறுகிறார்கள். மேலும் 2000 கோடி ஆண்டுகள் என்று விஞ்ஞானிகளும், 1200 கோடியாண்டுகள் என்று வானிலையாராட்சியாளர்களும் கூறுகிறார்கள். எப்படியாயினும் பலகோடிக்கணக்கான ஆண்டுகள் என்பது உண்மை

இப்படியாகத் தேவன், தாம் உருவாக்கிய பூமியை ஆண்டு கொள்ளவும், ஆட்சி புரியவும், தம்முடைய சமூகத்திலுள்ள தேவ தூதர்களில் ஒரு பகுதியினரைப் பிரித்தெடுத்து, இப் பூமியில் வசிக்கவும், அதை கண்டு கொள்ளவும், அழகுபடுத்தவும் அனுப்பி வைத்தார். இவர்களுக்கு அதிபதியாக "கேரூப்" என்னும் தூதனை அபிஷேகம் பண்ணிவைத்தார். எசேக் 28 ; 14

தேவனுடைய தோட்டமாகிய ஏதேனைப் போல அழகும் செழிப்புமாகிய இப்பூமியில் கேருப் வாசம் பண்ணினான். அவனைத் தேவன் பத்பராகம்...... மாணிக்கம் முதலிய இரத்தினங்களினாலும், அழகுபடுத்தியிருந்தார் எசே 28 ; 12-13 இவன் ஞானத்தால் நிறைந்த பூரண அழகுள்ளவனாயிருந்தான். தேவன் இவனை தம்முடைய "முத்திரைமோதிரமாக" வைத்திருந்தார். எசேக் 28 :12

இப்படியாக இப்பூமிக்கு அனுப்பப்பட்ட தூதர்களே இப்பூமியை ஆண்டு வந்தார்கள். இக்காலங்களில் இப்பூமியில் துன்பம், கவலை, வருத்தம், சஞ்சலம், பசி, மரணம் கிடையாது. எங்கும் சந்தோஷமும், சமாதானமும் தான் கேரூப் என்ற தூதன் தேவனுடைய சித்தத்தையறிந்து மேலும் மேலும் இப்பூமியை அழகுப்படுத்தி ஆண்டு வந்

தான். கேரூப்பின் சபையிலே கீதவாத்தியங்கள் முழங்கிக் கொண்டிருந்தன. இப்படியாக கேரூப் ஆடம்பரமாக இப் பூமியை ஆட்சிசெய்து கொண்டிருந்தான்.

பரலோகத்திலே தேவ சபை (சங்கீதம் 82;1) கூடும் பொழுது கேரூபும் அவன் சபையிலுள்ள தூதர்களும் தேவ சபையிலே பங்கு கொள்ளுவார்கள் இச்சபையிலே சகல தேவதூதர்களும தேவனாகிய கர்த்தர் 'பரிசுத்தர் பரிசுத்தர் பரிசுத்தர்' என்று துதித்துப்பணிந்து கொள்வார்கள் ஏசாயா 6:3

தேவசபையிலே கேரூப்பும் மகா கனம் பொருந்தின வனாகக் காணப்பட்டான. இத்தன்மையாக சேரூப் பல கோடிக்கணக்கான வருஷங்கள் இப்பூவுலகையாண்டு வந் தான். ஒரு சமயம் சேரூப்பும், அவன் தூதர்களும், பர லோகத்திலே நடந்த தேவ சபையிலே கலந்து கொண்டு இப்பூமிக்குத் திரும்பிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவன் தன் மனதிலே பெருமை கொண்டு, "நான் வானத் திற்கு ஏறுவேன்; தேவனுடைய நட்சத்திரங்களுக்கு (உன்ன தம்) மேலாக என் சிங்காசனத்தை உயர்த்துவேன்; வட புறங்களிலுள்ள ஆராதனைக் கூட்டத்தின் பர்வதத்திலே வீற்றிருப்பேன்; உன்னதமானவருக்கு (கர்த்தர்) ஒப்பா வேன்" என்று தன்மனதிலே நினைத்து, தன் தூதர்களிடம் கூறினான் ஏசாயா 14 : 13-14

இச்செய்தி உடனே தேவசமுகத்திற்கு எட்டியது. சேரூப்பும், அவன் தூதர்களும், இப்பூமிக்கு வருமுன்னாலே தேவனால் சிறைப்படுத்தப் பட்டார்கள். இப்பூமிக்கு வெளிச்சம் கொடுத்துக் கொண்டிருந்த (ஆதி 1;3) நட்சத் திரத்தை (அபிஜித்) தேவன் (ஏசா 50:31)மறைத்துப்போட் டார். (எசேக் 32:7-8) இப்பூமிக்கு வெட்பத்தட்பம் கொடுத் துக்கொண்டிருந்த சூரிய, சந்திர மற்றும் கிரகங்களையும் தேவன் மறைத்துப் போட்டார், (யோபு9.7) காரிருள் இப் பூமியை மூடிக் கொண்டது (சங் 18:9) சேரூப்பும் தூதர் களும் வேறோர் நட்சத்திரத்தில் சிறைப்படுத்தப்பட்டார் கள. சகல மேன்மையையும், மகிமையையும், ஆடம்பரத் தையும, அழகையும் இழந்த கேரூப் பணிந்து கொண்டான்

## கேரூப்பிற்கு வரவேற்பு

இதற்கு முன்னால், தேவனால் தண்டனைப் பெற்று சிறைப்பட்டிருந்த தூதர்கள், கேரூப்பை வரவேற்றார்கள்' ''நீயும் எங்களைப்போல் பலட்சியமானாயோ? எங்களுக்குச் சமானமானாயோ? உன்னதமானவருக்கு ஒப்பாவேன்'' என்று உன் இருதயத்தில் சொன்னாயே; (ஏசாயா 14: 10-12) அதிகாலையின் மகனாகிய விடிவெள்ளியே, நீ வானத்திலிருந்து விழுந்தாயே என்றும், தேவனுடைய பர்வதத்திலிருந்து ஆகாதவனென்று தள்ளி, காப்பாற்றுகிற சேரூபியயிருந்த உன்னை, அக்னிமயமான கற்களின் நடுவே இராதபடிக்கு (கர்த்தர்) அழித்துப்போட்டார்;

உன் அழகினால் உன் இருதயம் மேட்டிமையாயிற்று உன் மினுக்கினால் உன் ஞானத்தைக் கெடுத்தாய் என்றும் வாழ்த்தி வரவேற்றார்கள் எசேக் (28: 16-17)

தேவனாகிய கர்த்தர் இப்பூமியிலே சகலத்தையும் அழித்து நிர்மூலமாக்கி, பூமியை ஜலத்தினால் மூடினார். ஜலத்தின் மேல் காரிருள் சூழ்ந்திருந்தது. மகிமையை யிழந்து பலட்சியமான கேரூப் தேவனை நோக்கி மன்னிப்புக்காக மன்றாடினான். கர்த்தர் இரக்கமும், மன உருக்கமும், நீடிய சாந்தமும், மிகுந்தகிருபையும் முள்ளவர். சங்கிதம் 145 : 8)

அதனால் தேவன் அவன்மேல் இரக்கங்கொண்டு தம்முடைய சபைக்கு வந்து போகவும், தேவனோடு உறவாடவும் சலுகைக் கொடுத்தார். இந்த சலுகையைப் பெற்ற கேருப் என்ற ''சாத்தான்'' தேவ சபை கூடும் போதெல்லாம் அங்கு போய் வருவான். யோபு 1:6 இவ்வாறாக மோட்சயுகம் முடிந்தது. எத்தனை கோடியாண்டுகள் நடந்ததோ, யாமறியோம்!

# 2 விஸ்யுகம்

தேவனாகிய கா்த்தர் பரலோகமாகிய உன்னதத்திலே வாசம் பண்ணுகிறார் சங்14:2 சிற்சில சமயங்களில் தேவன் ஆகாய மண்டலங்களிலுள்ள விண் ஜோதிகளில் ஒன்றில் வான மண்டல ஆவிகளுக்குப் பேட்டிக்கொடுக்கும்போது, சாத்தானும் அவர்கள் மத்தியில் வந்து நிற்பான். அப் பொழுது கூடும் தேவசபையிலே, பல ஆலோசனைகள் கலந்து கொள்ளும் போது, நியாய விசாரணையும் நடை பெறும். சங்கிதம் 82:1

பூமியானது ஒழுங்கின்மையும், வெறுமையாயிருந்தது ஜலத்தின் மேல் இருள் இருந்தது. தேவ ஆவியானவர் ஜலத்தின் மேல் அசைவாடிக் கொண்டிருந்தார், ஆதி 1:2 அப்பொழுது தேவனாகிய கர்த்தர் இப்பூமியை புதுபிக்கக் சித்தங்கொண்டார். வெளிச்சம் உண்டாகக் கடவது என் றார் பூமியெங்தும் வெளிச்சமுண்டாயிற்று. தேவனால் மறைத்துவைத்திருந்த அபிஜித் என் மகா பெரிய நட்சத்திர மாகிய ஜோதிப் பிரகாசித்து இதுவே தட்ப வெட்ப மின் றிய வெளிச்சம் பின்பு தேவன் ஜலத்தின் மத்தியில் ஆகாய விரிவு (காற்று) உண்டாகக் கடவது என்றார். உடனே பூமி யின் நான்கு திசைகளிலும் காற்று விச ஆரம்பித்தது.

இதன்பின்பு தேவன் பூமி எங்கும் சூழ்ந்திருந்த ஜலம் ஓரிடத்தில்சேரவும் வெட்டாந்தரை காணப்படவுங்கடவது என்றார் ஆதி 1.9 வெட்டாந்தரைக்குப் பூமி என்றும், சேர்ந்த ஜலத்திற்கு சமூத்திரம் என்றும் தேவன் பேரிட் டார். பூமியின் மேல் புல் பூண்டு, செடி கொடிகளும், தாவரங்களும், கனிதரும்விருஷங்களும் உண்டாகக் கடவது என்றார. பூமியெங்தும தாவரங்கள் உண்டாகி பச்சை பசேலென்று காட்சியளித்தது.

தேவனாகிய கா்த்தர் தாம் முன்பு மறைத்து வைத்தி ருந்த சுடர்களை பிரகாசிக்கும்படி கட்டளையிட்டார்,

இச்சுடர்களில் ஒன்றாகிய சூரியனும் சந்திரனும் பிரகாசித்தது. மற்றும் கிரகங்களும், நட்சத்திரங்கள் தோன்றின சூரிய சந்திர கிரகங்களினால் அடையாளங்களும், வருஷங்களும், நாட்களும், காலங்களும் உண்டாயின. ஒவ்வொரு நட்சத்திரங்களும் கிரகங்களும், தன்னை தானே சுற்றிக் கொண்டு, தங்களில் மேன்மையுள்ள நட்சத்திரங்களையும் சுற்றிக் கொண்டிருக்கின்றன. சங் 19 : 5-6 நமது சூரிய குடும்பம் "அபிஜித்" என்ற ஒரு பெரிய நட்சத்திரத்தை சுற்றிக் கொண்டிருக்கிறது. சங்கிதம் 33 ; 6-9 ஒரு சுற்று சுற்ற 60 வருஷங்கள் ஆகிறது. (தமிழ் வருஷகள் 60) நமது சூரியன் இப்பூமிக்கு வெட்பத்தட்பத்தைக் கொடுக்கிறது.

பின்பு தேவன் ஜலமானது, நீரில் வாழும் ஜந்துக்களையும், (மீன் மற்றும் பிராணிகள்) ஆகாயத்தில் பறக்கும் சகல ஜாதிப் பறவைகளையும் ஜெனிப்பிக்கக் கடவது என்றார். ஆதி 1:20 அப்படியே எண்ணி, முடியாத பறவைகளையும் மீன் வகைகளையும், மற்றும் ஜீவ ஜந்துக்களையும் (ஜலமானது) பிறப்பித்தது. தேவன் இவைகளை ஆசீர்வதித்து. பலுகிபெருகும்படி கட்டளையிட்டார் ஆதி 1:22 அதன்படி பலுகிப்பெருகின. அப்படியே பூமியானது ஜாதி ஜாதியான சகல ஜீவ ஜந்துக்களையும், ஊரும் பிராணிகளையும் சகல நாட்டு, காட்டு மிருகங்களையும் ஜெனிப்பிக்கப் (பிறப்பிக்க) கடவது என்றார். ஆதி 1:24

பின்னும் தேவன் "நமது சாயலாகவும், நமது ரூபத்தின் படியேயும் மனுஷனை உண்டாக்குவோமாக" ஆதி 1: 26-28 அவர்கள் சமுத்திரத்திலுள்ள ஜீவ ஜந்துக்களையும், பூமியின் மேல் நடமாடுகிற ஜீவப்பிராணிகளையும் ஆளக் கடவர்கள் 'என்றார். தேவன் தம்முடைய சாயலாக மனுஷனை ஆணும் பெண்ணுமாக அவர்களை சிருஷ்டித்தார். ஆதி 1:27 அவர்களை நோக்கி "நீங்கள் பலுகுப் பெருகி பூமியை நிரப்பி அதைக் கீழ்ப்படுத்தி சமுத்திரத்தின் மச்சங்களையும ஆகாயத்து பறவைகளையும் பூமியின் மேல் நடமாடுகிற சகல ஜீவ ஜந்துக்களையும்,

ஆண்டுகொள்ளுங்கள்'' என்று சொல்லி அவர்களை ஆசீர்வதித்தார். ஆதி1:26,27,28.

இதன் பின்பு தேவன் தாம் படைத்த மக்களைப் பார்த்து, சகல வித பூண்டுகளையும், விதைதரும் கனி மரங்களாகிய சகல விருஷ்ஷங்களையும் உங்களுக்கு ஆகாரமாகக் கொடுத்தேன் என்றார். இது போல சகல வித பறவைகளுக்கும், ஊரும் பிராணிகளுக்கும் சகலவித மிருகங்களுக்கும் பசுமையான சகல வித பூண்டுகளையும் ஆகாரமாகக் கொடுத்தேன் என்றார்.

தேவ கட்டளைப்படி (வார்த்தையினால் சிருஷ்டிக்கப்பட்ட) மனுஷர்களும், மிருகங்களும், ஊரும் பிராணிகளும் பறவைகளும் மச்சங்களும் பலுகிப் பெருகின. தேவனாகிய கர்த்தர் பூமியின் மேல் இன்னும் மழையைப் பெய்யப் பண்ணவில்லை நிலத்தைப்பண்படுத்த மனுஷம் இருந்தது இல்லை ஆதி 2:5 எல்லாம் ஆவியினாலே செயல்பட்டு வந்தன.

தேவனாகிய கர்த்தருடைய வார்த்தையினால் உண்டாக்கப்பட்ட மக்கள் ஆவியின் சரீரமுடையவர்களாகவேயிருந்தார்கள். பறவைகளும் மிருகங்களும் அப்படியே இவர்கள் பலுகிப்பெருகியது மாம்சதேகமுள்ள நம்மைப் போல் அல்ல. எல்லாம் கூடினப் பொழுதில் நடந்ததாகவேயிருந்தது ஆவியின் ரூபமாக படைக்கப்பட்ட மனிதர்கள் தேவனோடு உறவாடவும் பரலோகம் போய் வரவும் சிலாக்கியம் பெற்றவர்களாகவேயிருந்தார்கள். தேவன், வேளா வேளைகளில் இப்பூமிக்கு வந்து இம் மக்களோடு கலந்துரையாடுவார். பாவம் உலகத்திலில்லை எல்லாம் பரிசுத்தமாயும், தேவ மகிமை நிறைந்ததுமாயிருந்தது. பரலோகத்திலோ, வேறு எந்த நட்சத்திரத்திலோ நடக்கும் தேவ சபைக்கு இம்மக்களும் போய் வந்தார்கள். இவர்களே தேவபுத்திரர் எனப்பட்டார்கள். இவர்களோடு சாத்தானும் தேவ சபையிலே கலந்துக்கொள்வான். யோபு 1:6 இப்படியாக ஆண்டுகள் கோடிக்கணக்கில் உருண்டோடின.

தேவ லோக இரகசியங்களை அறிந்தவனாகிய கேரூப் என்ற சாத்தான், ஒரு சமயம் தேவ சபையிலே வந்து நின்றான். அங்கு பூலோகத்து மனிதர்களும், பரலோக வாசிகளும் கலந்திருந்தார்கள. சாத்தான் வஞ்சகம், சூது, கபடு, பொருமை நிறைந்தவனாயிருந்தான். தேவன் சிருஷ்டித்த பூலோக மக்களைப் பார்த்து பொருமை கொண்டான். எப்படியாவது இவர்களை தேவனை விட்டு பிரிக்க வேண்டுமென்று திட்டம் தீட்டினான். தேவ சபை கூடியது. தேவனாகிய கர்த்தர் சாத்தானைப் பார்த்து நலம் விசாரித்தார். அப்பொழுது சாத்தான் கர்த்தரை நோக்கி; நீர் தேவாதி தேவன், சர்வத்திற்கும் வல்லவர், நீரே கர்த்தர், உம்முடைய நாமத்திற்கு மகிமையும் கனமும் உண்டாவதாக.

இப்போதும் நீர் பூலோகத்திலே மனிதர்களை உண்டாக்கியிருக்கிறீர். உமது வாக்கின்படி அவர்கள் பலுகிப்பெருகியிருக்கிறார்கள். உம்மை எப்பொழுதும் துதித்துக் கொண்டும், நீர் பரிசுத்தர் என்று உமமைப் போற்றிக் கொண்டும் இருக்கிறார்கள். அவர்களை இங்கும் உமது சமுகத்திற்கு வந்து உம்மை பணிந்து கொள் கிறார்கள் நீரும் வேளா வேளைகளில் பூலோகம் சென்று அவர்களோடு உரையாடுகிறீர். அவர்கள் கவலையற்று சந்தோஷமாயிருக்கிறார்கள். அதனால் உம்மை மகிழ்ச்சி யோடு பணிந்து கொள்ளுகிறார்கள். அவர்கள் இங்கு வரக்கூடாமலும், பூலோகத்தோடு ஒட்டிக் வாழ்கிறவர் களாகவும் இருந்தால், அவர்கள் உம்மை பணிந்து கொள் வார்களோ? என்றான்.

இப்பூவுலக மக்கள் ஆவியின் சரீரமுடையவர்களாக யிருந்ததினால் எங்கும் போகக்கூடியவர்களாகயிருந்தார் கள். தங்களுக்கு தேவனால் கொடுக்கப்பட்ட ஆகாரமாகிய கனி வகைகளை புசித்துக் கொண்டு, எவ்வித வருத்தம், கவலை, துன்பமின்றி மகிழ்ச்சியாக, தேவனைத் துதிப்பதும் அவர் இங்கு வந்திருக்கும் போது அவருடன் ஆனந்தமாக உரையாடுவதுமாயிருந்தார்கள. ஆவியின் ரூபத்தில் பலுகிப் பெருகினார்கள். இதுபோல சங்கீதம் 33:6 — ல்

சொல்லியபடி கர்த்தருடைய ஆவியின் சுவாசத்தினா அவைகளின் (நட்சத்திரங்களின்) சர்வசேனையும் உண்டா கப்பட்டது. இதனால் வேறு நட்சத்திரங்களிலோ, கிரக களிலோ, இப்பூலோக மக்களைப்போல, அங்கும் மக்க இருக்கிறார்கள். அப்பேர்ப்பட்ட இடங்களுக்கும் இ பூலோக மக்கள் போக்குவரத்து வைத்திருந்தார்கள் பறக்கும் தட்டு என்ற பொருள் பூமியில் இறங்கியதை மக்கள் பார்த்திருக்கிறார்கள் 60 கோடி மைல்களுக்கு அப் பால் ஒரு நட்சத்திரத்தில் மனிதர்களைப் போன்ற ஜீவ ராசிகள் இருக்கின்றன என்று தற்கால விஞ்ஞானிகள் கூற கிறார்கள்.

தேவனாகிய கர்த்தர் ஆவியின் சரீரமுடைய இப் பூலோக மக்களை எத்தனைக் கோடி வருஷங்கள் இப் பூமியில் வைத்திருந்தாரே யாம் அறியோம்! இக்காலத்தில் தேவ சமூகத்தில் சாத்தான் கேட்ட ஓர் கேள்வி (உம்மை பணிந்து கொள்வார்களோ) யின் சம்பந்தமாக இப் பூமி யின் மக்களை மாற்றியமைக்கத் தேவன் சித்தங் கொண்டார்.

## 3. பொன் யுகம்

தேவனுடைய வார்த்தையினால் உண்டாக்கப்பட்ட மனிதர்கள், மிருகங்கள், பறவைகள், ஆவியின் தேகத்தோடு இப் பூமியில் வாழ்ந்து வந்தார்கள். இப்பொழுது கர்த்தர் இவர்களை வேறோர் கிரகத்திலோ, நட்சத்திரத்திலோ அழைத்துக் கொண்டுபோய் குடியமர்த்தினார். இம்மக்கள் வேளா வேளைகளில் தேவனோடு இப் பூவுலகத்திற்கு வந்து போகும் உரிமையையும் பெற்றுக்கொண்டார்கள்.

இதன் பின் இப்பூமி மனிதர்களற்றும் மற்றும் ஜீவராசிகளற்றும் வெறுமையாயிருந்தது. இப்போது தேவன் இப்பூமியில் ஓர் அழகிய தோட்டத்தையுண்டாக்கி னார் அதற்கு 'ஏதேன் எனப்பெயரிட்டார் தோட்டத்திற்கு தண்ணீர் பாய ஓர் நதியை ஏற்படுத்தினார். இந்நதி தோட்டத்தை விட்டு வெளியேறும் போது நாலுநதி

களாகப் பிரிந்து போயின. தேவ கட்டளைப்படி தோட்டத்தின் மத்தியில் ஜீவ விருட்ஷமும் நன்மைத்தீமை அறியத்தக்க விருட்ஷமும் உண்டாயின. மற்றும் கனித்தரக்கூடிய சகலவித விருட்ஷங்களும் உண்டாயின.

திரும்பவும் இப்பூமியில் மனிதர்களை உண்டாக்க தேவன் சித்தங்கொண்டார். தேவனாகிய கர்த்தர் மனுஷனை பூமியின் மண்ணினாலே உருவாக்கி 'ஜீவ சுவாசத்தை' அவன் நாசிலே ஊதினார். மனுஷன் "ஜீவாத்துமா" வானான். ஆதி 2:7. இம் மனிதன் (மண்ணினால் செய்யப்பட்ட உருவம்) உயிர் பெற்று நடமாடினான். தேவன் தாம் உருவாக்கிய ஏதேன் தோட்டத்திலே இம் மனிதனை வைத்தார். இம் மனிதன் தேவனைப்பார்க்கவும் அவரோடுஉறவாடவும் பாக்கியம் பெற்றான் ஆதி 3:8 மண்ணினால்உருவாக்கப்பட்ட இம்மனிதனுக்கு தேவ சபை கூடுமிடங்களுக்கு சென்றுவர அனுமதியில்லை.

மனுஷனை, தேவன் தோட்டத்தைச்சுற்றிப் பார்க்க அழைத்துச் சென்றார். ஜீவவிருட்ஷம், நன்மை தீமை அறியத்தக்க விருட்ஷம் இவைகளைச் சுட்டிக் காட்டினார்' எல்லா விருட்ஷங்களின் கனிகளையும் நீ புசிக்கலாம் ஆனால் இந்த நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியை புசிக்க வேண்டாம் நீ அதை புசிக்கும் நாளில் சாகவே சாவாய் என்று கட்டளையிட்டார். ஆதி 2:17

இதன் பின்பு தேவன் மிருகங்களையும் பறவைகளையும் மற்றும் ஊரும் பிராணிகளையும் மண்ணினாலே உருவாக்கினார். மனுஷன் இவைகளெல்லாவற்றிக்கும் பெயரிட்டான். பின்பு மனிதன் தனிமையாயிருப்பது நல்ல தல்ல, ஏற்றத் துணையை உண்டாக்குவோமாக என்று தேவன் அறிந்து, அவனுக்கு அயர்ந்த நித்திரையைக் கொடுத்து அவன் விலா எலும்பிலிருந்து ஓர் எலும்பை எடுத்து, அதை ஓர் பெண்ணாக உருவாக்கி, அவன் முன் நிறுத்தினார். தேவன், மனிதனுக்கு 'ஆதாம்' என்று பெயரிட்டார். ஆதாம் தன் மனைவிக்கு 'ஏவாள்' என்று பெயரிட்டான். தேவன் ஆதாம் ஏவாளுக்கு; "புருஷன் தன் தகப்பனையும் தாயையும் விட்டு தன் மனைவியோடே இசைந்திருப்பான்.

அவர்கள் ஒரே மாம்சமாயிருப்பார்கள்'' என்ற மாறாத பிரமாணத்தை ஏற்படுத்தினார். ஆதி 2:24.

தேவன் இம்மக்களை அழைத்து, தோட்டத்தைச் சுற்றிக் காட்டி, அதைப் பாதுகாக்கவும், பண்படுத்தவும், கட்டளையிட்டார் ஆதி 2:15 ஆதாம் தன் மனைவிக்கு தேவன் கொடுத்த கட்டளைகளையும், நன்மை தீமை அறியத்தக்க விருட்ஷத்தின் நிபந்தனைகளையும் சொல்லி வைத்தான். இருவரும் நிர்வாணமாயிருந்தாலும் வெட்கப் படாதிருந்தார்கள். ஏனென்றால், இவர்கள் மண்ணினால் உருவாக்கப் பட்டிருந்தாலும், தேவனைக் கண்டு கொள்ளவும், தேவனோடு பேசவும் சிலாக்கியம் பெற்றிருந்தார்கள். ஆவியின் குணம் படைத்தவர்களாயிருந்தார்கள. ஆனால் தோட்டத்தை விட்டு வெளியே போக முடியாது. தேவனாகிய கர்த்தர் பகலின் குளிர்ச்சியான நேரத்தில் தோட்டத்திற்கு வருவார். மூவரும் பேசிக் கொண்டே தோட்டத்தை சுற்றிப் பார்த்துக் கொண்டே வருவார்கள். தேவன் இவர்களை ஆசீர்வதித்ததாகவோ, பலுகிப் பெருகுங்கள் என்று சொன்னதாகவோ தெரியவில்லை.

தேவன் விலக்கிய விருட்ஷத்தின் கனி தவிர பிற விருட்சத்தின் கனிகளையுண்டு களிப்புடன் ஆடிப் பாடி மன மகிழ்ச்சியாயிருந்தார்கள். மண்ணால் உருவாக்கப்பட்ட மிருகங்களும், பறவைகளும் இவர்களுடன் கூடிக் குலாவி, துள்ளிக் குதித்து விளையாடின. பறவைகள் மரங்களிலிருந்து ஆனந்தமாய்ப் பாடின. தேவனாகிய கர்த்தர் இதைப் பார்த்து மகிழ்ச்சியடைந்தார். சிற் சில சமயங்களில் தேவன் ஆவியின் சரீரமாகப் படைத்திருந்த மனுஷர்களில் சிலரையும் தம்மோடு தோட்டத்திற்கு அழைத்து வந்திருக்கிறார். ஆதி 3 : 5 இப்படியாக வருஷங்கள் கோடி கணக்கில் உருண்டோடின.

இவைகளெல்லாவற்றையும் பார்த்து கவனித்துக் கொண்டிருந்த சாத்தான், எப்படி இங்கு குழப்பத்தையும் மீறுதலையும் உண்டாக்கலாம் என்று சமயம் பார்த்துக் கொண்டிருந்தான். ஆதாமும் அவன் மனைவியும் தேவ

சொற்படி தோட்டத்தை பாதுகாக்கவும், பண் படுத்தவும் தவறாமலிருந்தார்கள். இப்படியிருக்கும் போது ஒரு நாள் ஆதாம் தோட்டத்தில் வேறோரிடத்தில் பண் படுத்தல் வேலை செய்து கொண்டிருக்கும் போது, அவன் மனைவி ஏவாள் தனிமையாயிருந்தாள். இதுவே தகுந்த சமயம் என்று அறிந்த சாத்தான், சர்ப்பம் என்ற மிருகம் ரூபத்தில் தோட்டத்திற்குள் நுழைந்தான். மிருகம் என்ற சர்ப்பம் சகல நாட்டு ஜீவன்களிலும் தந்திரமுள்ளதாயிருந்தது ஆதி 3 : 1 தோட்டத்தை பாதுகாக்க கூடிய ஆதாம் தன் கடமையில் தவறினான்.

தன்னிடத்தில் வந்த (சர்ப்பம் மிருகம்) சாத்தானை ஏவாள் கண்டு, சாதாரண மிருகம் தான் என நினைத்து அதனுடன் பேச ஆரம்பித்தாள். சாத்தான் ஏவாளை நோக்கி, 'நீங்கள் தோட்டத்திலுள்ள சகல விருட்ஷங்களின் கனியை புசிக்க வேண்டாமென்று தேவன் சொன்னதுண்டோ'' என்றான். அதற்கு ஏவாள், "நாங்கள் தோட்டத்திலுள்ள சகல விருட்ஷங்களின் கனிகளையும் புசிக்கலாம். ஆனால் தோட்டத்தின் ''நடுவில்'' இருக்கிற விருட்சத்தின் கனியைக் குறித்து, "நீங்கள் சாகாதபடிக்கு அதை புசிக்கவும், அதை தொடவும் வேண்டாம்'' என்று தேவன் கட்டளை யிட்டிருக்கிறார் என்றாள்.

அதற்கு சாத்தான் "நீங்கள் சாகவே சாவதில்லை. நீங்கள் அதை புசிக்கும் நாளிலே உங்கள் கண்கள் திறக்கப் படும் நீங்களும் நன்மை தீமையறிந்து, "தேவர்களைப்'' போல இருப்பீர்கள் என்று தேவன் அறிவார் என்றான். அப்பொழுது ஏவாள், அந்த விருட்சம், புசிப்புக்கு நல்லதும், பார்வைக்கு இன்பமும், புத்தியை தெளிவிக்கிறதற்கு இச்சிக்கப் படத்தக்க விருட்சமுமாயிருக்கிறது என்று கண்டு, அதின் கனியைப் பறித்து, புசித்து, பின் தன் புருஷனுக்கும் கொண்டு கொடுத்தாள். அவனும் (ஆதாம்) அவளிடம் வாங்கிப் புசித்தான்.

இச் சம்பவம் நடந்தவுடனே, அவர்கள் இருவரின் (ஆதாம், ஏவாள்) கண்களும் திறக்கப் பட்டன. அவர்கள்

தாங்கள் நிர்வாணிகள் என்று அறிந்து, வெட்கப் பட்டு, அத்தியிலைகளைத் தைத்து உடுத்தி கொண்டார்கள். சாத்தான் தான் வெற்றியடைந்ததை அறிந்து மகிழ்ச்சி யோடே போய் விட்டான். தேவர்களைப் போல இருப்பீர் களென்று சாத்தான் சொன்னதை நம்பி ஏவாள் ஏமாந் தாள். ஆவியினால் சிருஷ்டிக்கப்பட்ட மனுஷர்கள் சிற்சில சமயங்களில் தேவனோடு தோட்டத்திற்கு வந்திருந்ததைக் கண்டிருந்த ஏவாள், தாங்களும், தேவனோடு போய் வரலாம் என்று பேராசைப் பட்டாள்.

தேவனாகிய கர்த்தர் பகலின் குளிர்ச்சியான வேளை யில் ஏதேன் தோட்டத்திற்கு வந்தார். தோட்டத்தில் நடந்த சம்பவம் வெளியரங்கமாயிற்று தேவன் நால் வரையும் அழைத்தார். விசாரித்தார். ஆதாம் தன் குற் றத்தை ஏவாள் மேல் சுமத்தினான் ஏவாள் சர்ப்பத்தின் மேல் சுமத்தி, சர்ப்பம் என்னை வஞ்சித்துப் போட்டது என்றாள். சாத்தான் தான் வெற்றிக் கொண்டதையிட்டு பேசாமலிருந்தான்.

## தண்டனை ஆதி 3 : 14 - 19

I மிருகம்

1 சகல மிருகங்களிலும் சபிக்கப்பட்டி ருப்பாய். (பாம்பு)

2 உன் வயிற்றினாலே நகர்வாய்

3 நீ உயிரோடிருக்கும் நாளெல்லாம் மண்ணைத் தின்பாய்

II சாத்தான்

1 உனக்கும் ஸ்திரிக்கும் (ஏவாள்) பகை யுண்டாக்குவேன்.

2 உன்வித்துக்கும் (வம்சம்) அவள்வித் துக்கும் (ஸ்திரியின் வித்து கிறிஸ்து) பகையுண்டாக்குவேன்.

3 அவர் (ஸ்திரியின்-கிறிஸ்து) (கர்த்தரின் தூதனானவர்) உன் தலையை நசுக்குவார். நீ அவர் குதிங்காலை நசுக்குவாய்

III ஸ்திரி(ஏவாள்) 1 உன் ஆசை உன் புருஷனைப்பற்றியிருக்கும்·

2 அவன் உன்னை ஆண்டு கொள்வான்

3 நீ வேதனையோடே பிள்ளை பெறுவாய்

IV ஆதாம் 1 பூமி உன்னிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்

2 நீ வருத்தத்தோடே அதன் பலனைப் புசிப்பாய்,

3 நீ பூமிக்குத் திரும்பும் (மரித்தல்) மட்டும் உன் முகத்தின் வேர்வையால் ஆகாரம் புசிப்பாய்

4 நீ மண்ணாய் இருக்கிறாய், மண்ணுக்குத் திரும்புவாய்,

இப்படியாகத் தேவன் நால்வருக்கும் தண்டனைக் கொடுத்தார்.

தேவ சாபத்தால்' பாவம் பூமியை ஆண்டு கொண்டது கர்த்தர் ஆதாம் ஏவாளுக்கு தோல் உடைகளை உண்டு பண்ணி உடுத்தினார். ஆதாம் தான் எடுக்கப்பட்ட மண்ணைபண்படுத்த தேவன் அவர்களை (ஆதாம் ஏவாள் ஆசீர்வதித்து ஏதேன் தோட்டத்தை விட்டு வெளியே அனுப்பினார் ஆதி 3:23

ஏதேன் தோட்டம் எங்கேயிருக்கிறது என்று நம்மால் கிரகித்துக் கொள்ள முடியாது. அது மாமிச தேகமுள்ள கண்களுக்குத் தெரியாது. இவைகளெல்லாம் நடைபெற எத்தனை கோடி வருஷங்கள் ஆயிற்றோ யாமறியோம்!

# மண்யுகம்

ஆதாமும் ஏவாளும் பழங்களை பறித்து உண்டும், பூமியை பண்படுத்தி, விளைவு உண்டாக்கி ஆகாரமாக உண்டும் வாழ்ந்தார்கள். தேவன் இவர்களை ஆசிர்வதித் தார். இவர்கள் குடும்ப வாழ்க்கை நடத்தி வரும் பொழுது, காயீன், ஆபேல் என இரு குமாரர்கள் பிறந் தார்கள். காயீன் பயிர்த்தொழில் செய்தான். ஆபேல் ஆடு மேய்த்தான். சாத்தானின் பார்வை இப்பிள்ளைகள் மேலும் விழுந்தது.

ஆதாமின் குமாரர் இருவரும் தேவனுக்குக் காணிக்கை செலுத்தச் சென்றார்கள். ஆபேலையும் அவன் காணிக் கையையும் கர்த்தர் ஏற்றுக்கொண்டார். இப்போது சாத் தான் காயீன் இருதயத்திற்குள்புகுந்தான். காயீன் சகோதர அன்பை வெறுத்து ஆபேலைக் கொலை செய்தான். ஆதி 4:8 சாத்தானின் மறைமுக ஏவுதலினால் உலகத்தில் பகை, வர்மம், கொலை, பொறாமை, வஞ்சனை பெருகிற்று தேவனுக்கு விரோதமாக, மனுஷர்களைக் கொண்டு மறை முகமாக வேலை செய்து கொண்டிருந்தான்.

தேவனை உண்மையோடும், பக்தியோடும் தொழுது கொண்ட மனுஷர்களுமிருந்தார்கள், ஆதாம் 930 வருஷம் ஜீவித்திருந்து மேலும குமாரரையும், குமாரத்திகளையும் பெற்றான். ஆபேல் கொலையுண்டு போனபின், அவ னுக்கு பதிலாக "சேத் என்ற குமாரனைத் கொடுத்தார் மக்கள் தொகை உலகில் பெருகிற்று. ஆதாமுக்கு ஏழாம் தலைமுறையில் "ஏனோக்" என்பவன் தேவனோடு சஞ்ச ரித்தான். இதைபோல் சிற்சில குடும்பங்கள் தேவனைத் தொழுது கொண்டு வந்தார்கள், பெரும் பாலோர் சாத்தா னின் தூண்டுதலின் மூலமாக தங்களிஷ்டப்படி, மன போல் ஜீவித்தார்கள். தேவன் மனிதர்களுக்கு 1000 வருஷ ஆயுளைக் கொடுத்திருந்தார்.

தேவ லோக இரகசியங்களை அறிந்தவனாகிய கேரூப் என்ற சாத்தான், ஒரு சமயம் தேவ சபையிலே வந்து நின்றான். அங்கு பூலோகத்து மனிதர்களும், பரலோக வாசிகளும் கலந்திருந்தார்கள. சாத்தான் வஞ்சகம், சூது, கபடு, பொறாமை நிறைந்தவனாயிருந்தான். தேவன் சிருஷ்டித்த பூலோக மக்களைப் பார்த்து பொறாமை கொண்டான். எப்படியாவது இவர்களை தேவனை விட்டு பிரிக்க வேண்டுமென்று திட்டம் தீட்டினான். தேவ சபை கூடியது. தேவனாகிய கர்த்தர் சாத்தானைப் பார்த்து நலம் விசாரித்தார். அப்பொழுது சாத்தான் கர்த்தரை நோக்கி; நீர் தேவாதி தேவன், சர்வத்திற்கும் வல்லவர், நீரே கர்த்தர், உம்முடைய நாமத்திற்கு மகிமையும் கனமும் உண்டாவதாக.

இப்போதும் நீர் பூலோகத்திலே மனிதர்களை உண்டாக்கியிருக்கிறீர். உமது வாக்கின்படி அவர்கள் பலுகிப்பெருகியிருக்கிறார்கள். உம்மை எப்பொழுதும் துதித்துக் கொண்டும, நீர் பரிசுத்தர் என்று உமமைப் போற்றிக் கொண்டும் இருக்கிறார்கள். அவர்களை இங்கும் உமது சமுகத்திற்கு வந்து உம்மை பணிந்து கொள் கிறார்கள் நீரும் வேளா வேளைகளில் பூலோகம் சென்று அவர்களோடு உரையாடுகிறீர். அவர்கள் கவலையற்று சந்தோஷமாயிருக்கிறார்கள். அதனால் உம்மை மகிழ்ச்சி யோடு பணிந்து கொள்ளுகிறார்கள். அவர்கள் இங்கு வரக்கூடாமலும், பூலோகததோடு ஒட்டிக் வாழ்கிறவர் களாகவும் இருந்தால், அவர்கள் உம்மை பணிந்து கொள் வார்களோ? என்றான்.

இப்பூவுலக மக்கள் ஆவியின் சரீரமுடையவர்களாக யிருந்ததினால் எங்கும போகக்கூடியவர்களாகயிருந்தார் கள். தங்களுக்கு தேவனால் கொடுக்கப்பட்ட ஆகாரமாகிய கனி வகைகளை புசித்துக் கொண்டு, எவ்வித வருத்தம், கவலை, துன்பம்மின்றி மகிழ்ச்சியாக, தேவனைத் துதிப்பதும் அவர் இங்கு வந்திருக்கும்போது அவருடன் ஆனந்தமாக உரையாடுவதுமாயிருந்தார்கள. ஆவியின் ரூபத்தில் பலுகிப் பெருகினார்கள். இதுபோல சங்கீதம் 33:6 — ல்

சொல்லியபடி கர்த்தருடைய ஆவியின் சுவாசத்தினால் அவைகளின் (நட்சத்திரங்களின்) சர்வசேனையும் உண்டாக்கப்பட்டது. இதனால் வேறு நட்சத்திரங்களிலோ, கிரகங்களிலோ, இப்பூலோக மக்களைப்போல, அங்கும் மக்கள் இருக்கிறார்கள். அப்பேர்ப்பட்ட இடங்களுக்கும் இப்பூலோக மக்கள் போக்குவரத்து வைத்திருந்தார்கள். பறக்கும் தட்டு என்ற பொருள் பூமியில் இறங்கியதை மக்கள் பார்த்திருக்கிறார்கள் 60 கோடி மைல்களுக்கு அப்பால் ஒரு நட்சத்திரத்தில் மனிதர்களைப் போன்ற ஜீவராசிகள் இருக்கின்றன என்று தற்கால விஞ்ஞானிகள் கூறுகிறார்கள்.

தேவனாகிய கர்த்தர் ஆவியின் சரீரமுடைய இப்பூலோக மக்களை எத்தனைக் கோடி வருஷங்கள் இப்பூமியில் வைத்திருந்தாரே யாம் அறியோம்! இக்காலத்தில் தேவ சமூகத்தில் சாத்தான் கேட்ட ஓர் கேள்வி (உம்மை பணிந்து கொள்வார்களோ) யின் சம்பந்தமாக இப் பூமியின் மக்களை மாற்றியமைக்கத் தேவன் சித்தங்கொண்டார்.

## 3. பொன் யுகம்

தேவனுடைய வார்த்தையினால் உண்டாக்கப்பட்ட மனிதர்கள், மிருகங்கள், பறவைகள், ஆவியின் தேகத்தோடு இப் பூமியில் வாழ்ந்து வந்தார்கள். இப்பொழுது கர்த்தர் இவர்களை வேறோர் கிரகத்திலோ, நட்சத்திரத்திலோ அழைத்துக் கொண்டுபோய் குடியமர்த்தினார். இம்மக்கள் வேளா வேளைகளில் தேவனோடு இப் பூவுலகத்திற்கு வந்து போகும் உரிமையையும் பெற்றுக்கொண்டார்கள்.

இதன் பின் இப்பூமி மனிதர்களற்றும் மற்றும் ஜீவராசிகளற்றும் வெறுமையாயிருந்தது. இப்போது தேவன் இப்பூமியில் ஓர் அழகிய தோட்டத்தையுண்டாக்கினார் அதற்கு 'ஏதேன் எனப்பெயரிட்டார் தோட்டத்திற்கு தண்ணீர் பாய ஓர் நதியை ஏற்படுத்தினார். இந்நதி தோட்டத்தை விட்டு வெளியேறும் போது நாலுகுந்தி

ளாகப் பிரிந்து போயின. தேவ கட்டளைப்படி தோட்டத்தின் மத்தியில் ஜீவ விருட்ஷமும் நன்மைத்தீமை அறியத்தக்க விருட்ஷமும் உண்டாயின. மற்றும் கனித்தரக்கூடிய பலவித விருட்ஷங்களும் உண்டாயின.

திரும்பவும் இப்பூமியில் மனிதர்களை உண்டாக்க தேவன் சித்தங்கொண்டார். தேவனுகிய கர்த்தர் மனுஷனை பூமியின் மண்ணினுலே உருவாக்கி 'ஜீவ சுவாசத்தை' அவன் நாசியிலே ஊதினார் மனுஷன் "ஜீவாத்துமா" வானான். ஆதி 2:7. இம் மனிதன் (மண்ணினால் செய்யப்பட்ட உருவம்) உயிர் பெற்று நடமாடினான் தேவன் தாம் உருவாக்கிய ஏதேன் தோட்டத்திலே இம் மனிதனை வைத்தார். இம் மனிதன் தேவனைப்பார்க்கவும் அவரோடுஉறவாடவும் பாக்கியம் பெற்றான் ஆதி 3:8 மண்ணினால்உருவாக்கப்பட்ட இம்மனிதனுக்கு தேவ சபை கூடுமிடங்களுக்கு சென்றுவர அனுமதியில்லை.

மனுஷனை, தேவன் தோட்டத்தைக்சுற்றிப் பார்க்க அழைத்துச் சென்றார். ஜீவவிருட்ஷம், நன்மை தீமை அறியத்தக்க விருட்ஷம் இவைகளைச் சுட்டிக் காட்டினார். எல்லா விருட்ஷங்களின் கனிகளையும் நீ புசிக்கலாம் ஆனால் இந்த நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியை புசிக்க வேண்டாம் நீ அதை புசிக்கும் நாளில் சாகவே சாவாய் என்று கட்டளையிட்டார். ஆதி 2:17

இதன் பின்பு தேவன் மிருகங்களையும் பறவைகளையும் மற்றும் ஊரும் பிராணிகளையும் மண்ணினாலே உருவாக்கினார். மனுஷன் இவைகளெல்லாவற்றிக்கும் பெயரிட்டான். பின்பு மனிதன் தனிமையாயிருப்பது நல்லதல்ல, ஏற்றத் துணையை உண்டாக்குவோமாக என்று தேவன் அறிந்து, அவனுக்கு அயர்ந்த நித்திரையைக் கொடுத்து அவன் விலா எலும்பிலிருந்து ஓர் எலும்பை எடுத்து, அதை ஓர் பெண்ணுக உருவாக்கி, அவன் முன் நிறுத்தினார். தேவன், மனிதனுக்கு 'ஆதாம்' என்று பெயரிட்டார். ஆதாம் தன் மனைவிக்கு 'ஏவாள்' என்று பெயரிட்டான். தேவன் ஆதாம் ஏவாளுக்கு; "புருஷன் தன் தகப்பனையும் தாயையும் விட்டு தன் மனைவியோடே இசைந்திருப்பான்.

அவர்கள் ஒரே மாம்சமாயிருப்பார்கள்'' என்ற மாறாத பிரமாணத்தை ஏற்படுத்தினார். ஆதி 2:24.

தேவன் இம்மக்களை அழைத்து, தோட்டத்தை சுற்றிக் காட்டி, அதைப் பாதுகாக்கவும், பண்படுத்தவும் கட்டளையிட்டார் ஆதி 2:15 ஆதாம் தன் மனைவிக்கு தேவன் கொடுத்த கட்டளைகளையும், நன்மை தீமை அறியத்தக்க விருட்ஷத்தின் நிபந்தனைகளையும் சொல்லி வைத்தான். இருவரும் நிர்வாணமாயிருந்தாலும் வெட்கப் படாதிருந்தார்கள். ஏனென்றால், இவர்கள் மண்ணினால் உருவாக்கப் பட்டிருந்தாலும், தேவனைக் கண்டு கொள்ள வும், தேவனோடு பேசவும் சிலாக்கியம் பெற்றிருந்தார்கள். ஆவியின் குணம் படைத்தவர்களாயிருந்தார்கள். ஆனால் தோட்டத்தை விட்டு வெளியே போக முடியாது. தேவனா கிய கர்த்தர் பகலின் குளிர்ச்சியான நேரத்தில் தோட்டத் திற்கு வருவார். மூவரும் பேசிக் கொண்டே தோட்டத்தை சுற்றிப் பார்த்துக் கொண்டே வருவார்கள். தேவன் இவர் களை ஆசீர்வதித்ததாகவோ, பலுகிப் பெருகுங்கள் என்று சொன்னதாகவோ தெரியவில்லை.

தேவன் விலக்கிய விருட்ஷத்தின் கனி தவிரபிற விருட்சத் தின் கனிகளையுண்டு களிப்புடன் ஆடிப் பாடி மன மகிழ்ச் சியாயிருந்தார்கள். மண்ணால் உருவாக்கப்பட்ட மிருகங் களும், பறவைகளும் இவர்களுடன் கூடிக் குலாவி, துள்ளிக் குதித்து விளையாடின. பறவைகள் மரங்களிலிருந்து ஆனந் தமாய்ப் பாடின. தேவனாகிய கர்த்தர் இதைப் பார்த்து மகிழ்ச்சியடைந்தார். சிற்சில சமயங்களில் தேவன் ஆவி யின் சரீரமாகப் படைத்திருந்த மனுஷர்களில் சிலரையும் தம்மோடு தோட்டத்திற்கு அழைத்து வந்திருக்கிறார். ஆதி 3 : 5 இப்படியாக வருஷங்கள் கோடி கணக்கில் உருண்டோடின.

இவைகளெல்லாவற்றையும் பார்த்து கவனித்துக் கொண்டிருந்த சாத்தான், எப்படி இங்கு குழப்பத்தையும் மீறுதலையும் உண்டாக்கலாம் என்று சமயம் பார்த்துக் கொண்டிருந்தான். ஆதாமும் அவன் மனைவியும் தேவ

சொற்படி தோட்டத்தை பாதுகாக்கவும், பண படுத்தவும் தவறாமலிருந்தார்கள். இப்படி யிருக்கும் போது ஒரு நாள் ஆதாம் தோட்டத்தில் வேறோரிடத்தில் பண படுத்தல் வேலை செய்து கொண்டிருக்கும் போது, அவன் மனைவி ஏவாள் தனிமையாயிருந்தாள். இதுவே தகுந்த சமயம் என்று அறிந்த சாத்தான், சர்ப்பம் என்ற மிருகம் ரூபத்தில் தோட்டத்திற்குள் நுழைந்தான். மிருகம் என்ற சர்ப்பம் சகல நாட்டு ஜீவன்களிலும் தந்திரமுள்ளதாயிருந்தது ஆதி 3 : 1 தோட்டத்தை பாதுகாக்க கூடிய ஆதாம் தன் கடமையில் தவறினான்.

தன்னிடத்தில் வந்த (சர்ப்பம் மிருகம்) சாத்தானை ஏவாள் கண்டு, சாதாரண மிருகம் தான் என நினைத்து அதனுடன் பேச ஆரம்பித்தாள். சாத்தான் ஏவாளை நோக்கி, 'நீங்கள் தோட்டத்திலுள்ள சகல விருட்ஷங்களின் கனியை புசிக்க வேண்டாமென்று தேவன் சொன்னதுண்டோ'' என்றான். அதற்கு ஏவாள், "நாங்கள் தோட்டத்திலுள்ள சகல விருட்ஷங்களின் கனிகளையும் புசிக்கலாம். ஆனால் தோட்டத்தின் ''நடுவில்'' இருக்கிற விருட்சத்தின் கனியைக் குறித்து, "நீங்கள் சாகாதபடிக்கு அதை புசிக்கவும், அதை தொடவும் வேண்டாம்'' என்று தேவன் கட்டளை யிட்டிருக்கிறார் என்றாள்.

அதற்கு சாத்தான் "நீங்கள் சாகவே சாவதில்லை. நீங்கள் அதை புசிக்கும் நாளிலே உங்கள் கண்கள் திறக்கப் படும் நீங்களும் நன்மை தீமையறிந்து, "தேவர்களைப்'' போல இருப்பீர்கள் என்று தேவன் அறிவார் என்றான். அப்பொழுது ஏவாள், அந்த விருட்சம், புசிப்புக்கு நல்லதும், பார்வைக்கு இன்பமும், புத்தியை தெளிவிக்கிறதற்கு இச்சிக்கப் படத்தக்க விருட்சமுமாயிருக்கிறது என்று கண்டு, அதின் கனியைப் பறித்து, புசித்து, பின் தன் புருஷனுக்கும் கொண்டு கொடுத்தாள். அவனும் (ஆதாம்) அவளிடம் வாங்கிப் புசித்தான்.

இச் சம்பவம் நடந்தவுடனே, அவர்கள் இருவரின் (ஆதாம், ஏவாள்) கண்களும் திறக்கப் பட்டன. அவர்கள்

தாங்கள் நிர்வாணிகள் என்று அறிந்து, வெட்கப்பட்டு, அத்தியிலைகளைத் தைத்து உடுத்தி கொண்டார்கள். சாத்தான் தான் வெற்றியடைந்ததை அறிந்து மகிழ்ச்சி யோடே போய் விட்டான். தேவர்களைப் போல இருப்பீர் களென்று சாத்தான் சொன்னதை நம்பி ஏவாள் ஏமாந் தாள். ஆவியினால் சிருஷ்டிக்கப்பட்ட மனுஷர்கள் சிற்சில சமயங்களில் தேவனோடு தோட்டத்திற்கு வந்திருந்ததைக் கண்டிருந்த ஏவாள், தாங்களும், தேவனோடு போய் வரலாம் என்று பேராசைப் பட்டாள்.

தேவனாகிய கர்த்தர் பகலின் குளிர்ச்சியான வேளை யில் ஏதேன் தோட்டத்திற்கு வந்தார். தோட்டத்தில் நடந்த சம்பவம் வெளியரங்கமாயிற்று தேவன் நால் வரையும் அழைத்தார். விசாரித்தார். ஆதாம் தன் குற் றத்தை ஏவாள் மேல் சுமத்தினான் ஏவாள் சர்ப்பத்தின் மேல் சுமத்தி, சர்ப்பம் என்னை வஞ்சித்துப் போட்டது என்றாள். சாத்தான் தான் வெற்றிக் கொண்டதையிட்டு பேசாமலிருந்தான்.

## தண்டனை ஆதி 3 : 14 - 19

I மிருகம்

1 சகல மிருகங்களிலும் சபிக்கப்பட்டி ருப்பாய். (பாம்பு)

2 உன் வயிற்றினாலே நகர்வாய்

3 நீ உயிரோடிருக்கும் நாளெல்லாம் மண்ணைத் தின்பாய்

II சாத்தான்

1 உனக்கும் ஸ்திரிக்கும் (ஏவாள்) பகை யுண்டாக்குவேன்.

2 உன்வித்துக்கும் (வம்சம்) அவள்வித் துக்கும் (ஸ்திரியின் வித்து கிறிஸ்து) பகையுண்டாக்குவேன்.

3 அவர் (ஸ்திரியின்-கிறிஸ்து) (கர்த்தரின் தூதனானவர்) உன் தலையை நசுக்குவார். நீ அவர் குதிங்காலை நசுக்குவாய்

III ஸ்திரி(ஏவாள்) 1 உன் ஆசை உன் புருஷனைப்பற்றியிருக்கும்.

2 அவன் உன்னை ஆண்டு கொள்வான்

3 நீ வேதனையோடே பிள்ளை பெறுவாய்

IV ஆதாம் 1 பூமி உன்னிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்

2 நீ வருத்தத்தோடே அதன் பலனைப் புசிப்பாய்,

3 நீ பூமிக்குத் திரும்பும் (மரித்தல்) மட்டும் உன் முகத்தின் வேர்வையால் ஆகாரம் புசிப்பாய்

4 நீ மண்ணாய் இருக்கிறாய், மண்ணுக்குத் திரும்புவாய்,

இப்படியாகத் தேவன் நால்வருக்கும் தண்டனைக் கொடுத்தார்.

தேவ சாபத்தால்' பாவம் பூமியை ஆண்டு கொண்டது கர்த்தர் ஆதாம் ஏவாளுக்கு தோல் உடைகளை உண்டு பண்ணி உடுத்தினார். ஆதாம் தான் எடுக்கப்பட்ட மண்ணைபண்படுத்த தேவன் அவர்களை (ஆதாம் ஏவாள் ஆசீர்வதித்து ஏதேன் தோட்டத்தை விட்டு வெளியே அனுப்பினார் ஆதி 3:23

ஏதேன் தோட்டம் எங்கேயிருக்கிறது என்று நம்மால் கிரகித்துக் கொள்ள முடியாது. அது மாமிச தேகமுள்ள கண்களுக்குத் தெரியாது. இவைகளெல்லாம் நடைபெற எத்தனை கோடி வருஷங்கள் ஆயிற்றோ யாமறியோம்!

# மண்யுகம்

ஆதாமும் ஏவாளும் பழங்களை பறித்து உண்டும், பூமியை பண்படுத்தி, விளைவு உண்டாக்கி ஆகாரமாக உண்டும் வாழ்ந்தார்கள். தேவன் இவர்களை ஆசீர்வதித் தார். இவர்கள் குடும்ப வாழ்க்கை நடத்தி வரும் பொழுது, காயீன், ஆபேல் என இரு குமாரர்கள் பிறந் தார்கள். காயீன் பயிர்த்தொழில் செய்தான். ஆபேல் ஆடு மேய்த்தான். சாத்தானின் பார்வை இப்பிள்ளைகள் மேலும் விழுந்தது.

ஆதாமின் குமாரர் இருவரும் தேவனுக்குக் காணிக்கை செலுத்தச் சென்றார்கள். ஆபேலையும் அவன் காணிக் கையையும் கர்த்தர் ஏற்றுக்கொண்டார். இப்போது சாத் தான் காயீன் இருதயத்திற்குள்புகுந்தான். காயீன் சகோதர அன்பை வெறுத்து ஆபேலைக் கொலை செய்தான் ஆதி 4:8 சாத்தானின் மறைமுக ஏவுதலினால் உலகத்தில் பகை, வர்மம், கொலை, பொறாமை, வஞ்சனை பெருகிற்று தேவனுக்கு விரோதமாக, மனுஷர்களைக் கொண்டு மறை முகமாக வேலை செய்து கொண்டிருந்தான்.

தேவனை உண்மையோடும், பக்தியோடும் தொழு கொண்ட மனுஷர்களுமிருந்தார்கள், ஆதாம் 930 வருஷம் ஜீவித்திருந்து மேலும குமாரரையும், குமாரத்திகளையும் பெற்றான. ஆபேல் கொலையுண்டு போனபின், அவ னுக்கு பதிலாக "சேத் என்ற குமாரனைத் கொடுத்தார் மக்கள் தொகை உலகில் பெருகிற்று. ஆதாமுக்கு ஏழா தலைமுறையில் "ஏனோக்" என்பவன் தேவனோடு சஞ் ரித்தான. இதைபோல் சிற்சில குடும்பங்கள் தேவனை தொழுது கொண்டு வந்தார்கள், பெரும் பாலோர் சாத் னின் தூண்டுதலின் மூலமாக தங்களிஷ்டப்படி, மன போல் ஜீவித்தார்கள். தேவன் மனிதர்களுக்கு 1000 வருஷ ஆயுளைக் கொடுத்திருந்தார்.

# 8. இரட்சிப்பின் உலகம்

## கி. பி. 1 - 2000

சாத்தானும் தன் இராஜ்யத்தை விரிவாக்க மக்கள் உள்ளத்தில் மறைமுகமாக வசித்து மக்களை திசைதிருப்பி, கொண்டிருந்தான் மத் 15. 19 இதனால் தெரிந்து கொள்ள பட்ட யூதரும் எப்பிராயீமமும் தேவாதி தேவனை உண்மையோடும் பக்தியோடும் தொழுது கொள்ளாமல் மண்ணாசை பெண்ணாசை, பொன்னாசை இவைகளிலே மயங்கியிருந்தனர். இந்த ஆசைகளை நிறைவேற்றுவதற்காக மக்கள், வஞ்சகம், சூது இவைகளைக் கடைபிடிக்கவும் கொலை-கொள்ளை செய்யவும் தலைப்பட்டனர். இவைகளின் மூலம் பரிதாபம் தலைவிரித்தாடியது. தரித்திரர் ஒடுக்கப் பட்டனர்.

மேலே சொல்லப்பட்ட குணங்களைப் போக்கவும், சாத்தானின் தலையை நசுக்கவும், மனிதனை மீட்கவும் தேவாதி தேவன் இப் பூவுலகில் தீர்க்கர்களின் உரைப் படி ஓர் கன்னிகையின் வயிற்றில் பாலகனாக அவதரித்தார். ஏசாயா 7:14. $33\frac{1}{2}$ வருஷம் இவ்வுலகில் வாழ்ந்தார். கடைசி $3\frac{1}{2}$ வருஷம் இப்பூமியின் மக்களோடு சஞ்சரித்து, தீமையை நன்மையினாலே வென்றார். தேவனாகிய தம்மை உலக மக்களுக்கு காண்பித்தார். அன்பு, சந்தோஷம், சமாதானம், நீடிய பொறுமை, தயவு, நற்குணம் விசுவாசம், சாந்தம், இச்சையடக்கம் இப்பேர்ப்பட்ட நற் குணங்களை மக்களுக்கு போதித்தார். கலாத் 5.9.

"நானே வழியும், சத்தியமும், ஜீவனுமாயிருக்கிறேன். யோவான் 14:6 என்னை விசுவாசிக்கிறவன் நித்திய ஜீவனைப் பெற்றுக் கொள்வான் யோவான் 11 25 என்றும் போதித்தார். ஜுரம், திமிர்வாதம், குஷ்டரோகம்போன்ற வியாதிகளை குணமாக்கினார். குருடருக்கும் பார்வையைக் கொடுத்தார். செவிடர் கேட்டார்கள். மரித்தோர் உயிரோடெழும்பினர். அநேகருக்குப் பிடித்திருந்த பிசாசுகளைத் துரத்தினார்.

தேவாதி தேவன் இயேசு கிறிஸ்துவாக இவ்வுலகத்தில் நன்மை செய்கிறவராக சுற்றித்திரிந்தார். மக்களுக்கு நல்ல உபதேசங்களைக் கற்பித்தார். இயேசு கிறிஸ்துவாகிய தம்மை யார் யார் விசுவாசித்து நல் ஜீவியம் செய்கிறார்களோ, அவர்களெல்லாரும் பரலோக வாழ்வைப் பெறுவார்கள் என்றும் போதித்தார்.

சாத்தானும் மறைமுகமாயிருந்து, மக்களையும், மதத் தலைவர்களையும், அரசியல் தலைவர்களையும், இயேசு கிறிஸ்துவுக்கு விரோதமாகத் தூண்டி விட்டான். இதன் மூலம் இம் மக்கள் இயேசு கிறிஸ்துவைப் பிடித்து சிலுவையில் அடித்து கொன்றார்கள். ஆனாலும் தீர்க்கர்கள் உரைத்த படி 3ம் நாள் உயிரோடு எழுந்திருந்து தம் பக்தர்களுக்கு, தாம் ஜீவனோடிருப்பதாகக் காண்பித்தார்.

உயிரோடெழுந்த இயேசு கிறிஸ்து நரக பாதாளத்துக்குச் சென்று, அங்கு காவலில் வைக்கப் பட்ட ஆவிகளுக்கும், அக்கிரமத்தால் தண்டிக்கப்பட்டு இறந்த மக்களின் ஆவிகளுக்கும், மரணத் தண்டனைப் பெற்று இறந்தவர்களுக்கும், கொலை, தற்கொலை, விபத்து இவைகளினால் இறந்த மக்களின் ஆவிகளுக்கும் போதனைக் கொடுத்தார் 1பேதுரு 3:18, 1பேதுரு 4:6.

இதன் பின் 40 நாட்கள் இவ்வுலகத்தில் சூட்சம சரீரத்தோடு, தம் பக்தர்களுக்கு தரிசனம் கொடுத்ததோடு, அவர்களோடு ஆகாரம் அருந்தியும், தம்மைத் தொட்டுப் பார்க்கவும் செய்து, தான் முன்பு உலகத்தில் வாழ்ந்த இயேசு கிறிஸ்து தான் என்பதையும், இப்போது உயிரோடு எழுந்து சூட்சம சரீரத்தோடு ஜீவிக்கிறேன் என்பதையும் நிரூபித்து காண்பித்தார்.

இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்த 40ம் நாள் பரலோகத்திற்குப் போகும் போது தம் பக்தர்களை அழைத்து உபதேசம் கொடுத்தார். "நீங்கள் உலகமெங்கும் போய் உபதேசத்தை மக்களுக்குக் கூறுங்கள். உலகமெங்குமுள்ள சகல ஜாதிகளுக்கும், சகல பாஷைக்காரருக்கும், சகல

தேசத்தார்களுக்கும், என் நாமம் அறிவிக்கப்பட வேண்டும். என் நாமத்தைக் கொண்டு சாத்தானோடு எதிர்த்து நில்லுங்கள். அப்பொழுது அவன் சூட்சி செல்லாமல் போய் விடும். சாத்தான் கெர்ச்சிக்கிற சிங்கம் போல் எவனைக் கெடுக்கலாம் என்று வகைத் தேடிச் சுற்றித் திரிகிறான். அவனுக்குப் பயப்பட வேண்டாம நான் உங்களை என் நாமத்தினால் காத்துக் கொள்வேன்'' என்று வாக்குரைத்தார்.

இப்படியாக பக்தர்களுக்கு வாக்குரைத்த கர்த்தராகிய இயேசு கிறிஸ்து, ''நான் பரலோகம் போய், திரும்ப சீக்கிரத்தில் இப் பூமிக்கு வருவேன். நான் வந்து உங்கள் எல்லாரையும், உங்களால் என் நாமத்தை அறிந்து, தெரிந்து ஏற்றுக் கொண்ட சகல மக்களையும, என்னைப் போல சூட்சம சரீரத்தோடு பரலோகத்திற்கு அழைத்துச் செல்வேன்.

இவ்வுலகில் உங்களுக்குச் சாத்தானின் சூட்சியினால் பல துன்பங்களும், இடைஞ்சல்களும், கஷ்டங்களும், உண்டாகும். அப்பொழுது கலங்காமலும், திகையாமலும், என் நாமத்தைப் பற்றிக் கொண்டிருங்கள். நான் எப்பொழுதும் உங்களோடேயிருப்பேன். சோர்ந்து போகாமல் திடனாயிருங்கள்'' என்று சொல்லி பரலோகஞ் சென்றார். இதன் பின்பு தேவனாகிய கர்த்தர், ஆபிரகாமுக்கு வாக்களித்த வாக்கின் படியே இஸ்ரவேலராகிய மக்களை ஆசீர்வதித்து, எருசலேம் பகுதியை (மேற்கு ஆசியா) ஒரு தேசமாக்கிக் கொடுத்தார். தாவீது, சாலமன் என்ற கீர்த்திப் பெற்ற அரசர்களை அதில் ஆட்சி செய்ய ஏற்படுத்தியிருந்தார். சாலமன் மன்னனை கர்த்தர், செல்வத்திலும் கீர்த்தியிலும், ஞானத்திலும ஆசீர்வதித்திருந்தார், இம் மன்னன் முன் ஜீவியத்தில் தேவனுக்கு மகிமையாக ஜீவித்து, தேவனுக்கு ஓர் மகிமையான தேவாலயத்தையும கட்டினான் பின் ஜீவ்யத்தில் தன் மனைவிகளால், விக்ரக வணக்கத்தில் ஈடு பட்டு தேவனுக்கு மகிமையற்றவைகளைச் செய்து ஜனங்களை சீர் கெட்ட வழியில் திருப்பினான்.

இதனால் ராஜ்யம் இரண்டாகப் பிரிந்தது. வட பாகம் ''இஸ்ரயேல அல்லது எப்ராயீம்'' நாடு என்றும், தென் பாகம் யூத நாடு என்றும் பிரிந்தது. வட ராஜ்ய மக்களார் எப்ராயீமர், விக்ரக வணக்கத்தில் ஆழ்ந்து விட்டதால், தேவன் அவர்களை வெறுத்து நாட்டை விட்டு வெளியே துரத்தினார். எப்ராயீமர் வெளியேறி. துருக்கி தேசம் வழியாக மத்திய ஐரோப்பா வழியாக ஜெர்மனியிலிருந்து, இங்கிலாந்து தேசத்தில் போய் வாசம் பண்ணினார்கள். இங்கு இவர்கள் கிறிஸ்தவர்களாகி, மேன்மையடைந்து மன்னர்கள் ஆகி, நாகரீகத்தில் உயர்ந்து, கடல் கடந்து வியாபாரத்தில் விருத்தியாகி, சென்ற தேசங்களிலெல்லாம் இயேசு கிறிஸ்துவின் சுவிசேஷத்தை அறிவித்துத் திருச்சபையை உலக முழுவதும் ஏற்படுத்தி, குடியரசில் முடியரசாக வாழ்ந்து இயேசுவின் நாமத்தைத் துதித்துக் கொண்டிருக்கிறார்கள்.

தென் பாகம் யூத நாடு. இம் மக்கள் யூதர் என்று அழைக்கப்பட்டனர். இவர்களும் கொஞ்ச காலம் தேவனை உண்மையோடு சேவித்து, பெருமை கொண்டு, தங்கள் மனம் போல் நடந்து தேவனாகிய கர்த்தரைத் துதிப்பதில் மாயம் பண்ணினார்கள்.

இதனால் கர்த்தர் யூதரை நாட்டை விட்டு வெளியே துரத்தி நாட்டைப் பாழாக்கினார். யூதன் உலகமெங்கும் அலைந்து திரிந்ததில் நாட்டில் அகதிகளாகவும், சில நாட்டில் குடியுரிமைப் பெற்று வீடு கட்டி வியாபாரம் செய்து மிக வசதிப் படைத்தவர்களாக வாழ்ந்தனர்.

இதன் பிறகு உலகமெங்குமுள்ள யூதர்கள் தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, தேவனிடத்தில் மன்றாடினார்கள். இரக்கமுள்ள தேவன் யூதரிடத்தில் பரிதாபங் கொண்டு, எருசலேம் பகுதியை திரும்பவும் அவர்களுக்குக் கொடுத்தார். பாழடைந்து கிடந்த நாட்டை யூதர்கள் வந்து, அதை திருத்திச் செழிக்கச் செய்து ''இஸ்ரயேல்'' என்னும் இராஜ்யத்தை ஏற்படுத்தி தேவனாகிய கர்த்தரை உண்மையோடு தொழுது வருகிறார்கள்.

# 9 அந்திக்கிறிஸ்து காலம்

இயேசு கிறிஸ்துவின் உபதேசம், அவரின் பக்தர்களால் உபதேசிக்கப்பட்டு, உலகமெங்கிலும் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டோர் பெருகினர். சாத்தானும் தன் இராஜ்யம் விருத்தியடையவில்லையே, என்று எரிச்சலானான். சாத்தானின் பிரிதிநிதியும் அவனால் அனுப்பப் பட்ட தூதனுமான அந்தி கிறிஸ்து என்பவன், மக்களோடு மக்களாய் வாழ்ந்து இயேசுகிறிஸ்துவின் பக்தர்களை திசை திருப்பிக் கொண்டிருக்கிறான்.

அந்திக் கிறிஸ்து யார்? இவ்வுலகத்தில் பிறந்து மாம்சத்தில் வந்த இயேசு கிறிஸ்துவை மறுதலிக்கிறவனே அந்திக்கிறிஸ்து. இவன் சாத்தானால் அனுப்பப்பட்ட தூதன். இவன் உலகத்தில் பிறந்து வாழ்ந்த ஒரு மனுஷனே! இவன் யூதனாகவுமிருக்கலாம்! மற்ற குலத்தவனாகவுமிருக்கலாம் மாம்சத்தின் இச்சையும், கண்களின் இச்சையும், ஜீவனத்தின் பெருமையுமான குணங்களுடையவன் அந்திகிறிஸ்து! 1 யோவான் 2:16 புத்தியீனமான தர்க்கங்களையும், வம்சவரலாறுகளையும், சண்டைகளையும், வாக்குவாதங்களையும் உண்டாக்குகிறவனும், வேத புரட்டனாகவுமிருப்பான். கடைசி காலத்தில் தேவாலயத்தில் ''நானே தேவன்'' என்று உட்கார்ந்திருப்பான்!

பூமியிலே மாம்ச இச்சைகளாகிய விபச்சாரம், வேசித்தனம், அசுத்தம், காமவிகாரம், விக்ரகாராதனை, பில்லிசூனியம், பகைகள், விரோதங்கள், வைராக்கியங்கள்' கோபங்கள், சண்டைகள், பிரிவினைகள், மார்க்கப்பேதங்கள் முதலிய குணங்களையுண்டாக்குவான் மக்களின் மனதைக் கிறிஸ்துவின் உண்மையினின்று விலக்கும்படி பிரயாசப்படுவான். நயவசனிப்பினாலும், இச்சகப் பேச்சினாலும், கபடில்லாதவர்களுடைய இருதயத்தை வஞ்சிக்கிறவனாகவுமிருப்பான்!

கடைசி காலங்களில், கிறிஸ்துவின் உபதேசத்திற்கு எதிராக பூமியின் இராஜ்யங்களை தூண்டி விடுவான். பல கலகங்களும், சண்டைகளும், யுத்தங்களும் உண்டாகும்

அந்திக் கிறிஸ்துவினால் பல அற்புதமான செயல்களும் செய்யப்படும். அநேகருடைய அன்பு தணிந்து போகும். பலர் கிறிஸ்துவின் விசுவாசத்தினின்று விழுந்து போவார்கள் எதிர்த்தோர் அநேகர் கொலைசெய்யப் படுவார்கள்.. ஆனாலும் கடைசியாக அந்திக்கிறிஸ்துவும், அவன் தூதர்களும் அக்னிக் கடலில் தள்ளப்படுவார்கள். சாத்தான் கட்டுண்டவனாக காவலில் வைக்கப்படுவான்.

## 10 நித்திய மறுவாழ்வு யுகம்

ஆதாம் கால முதல் இந்நாட்கள் மட்டும் இறந்து போன மனிதகுல மக்கள் யாவரும், இப்பூமியின் மண்ணுக்குள் புதைக்கப்பட்டார்கள். இப்போது மக்கள் மனதில் தோன்றும் கேள்வி என்ன? மனிதன் மரித்தபின் அவனது ஆவி எங்கே போகிறது? எங்கே தங்கியிருக்கிறது? அது என்ன நிலமையிலிருக்கிறது? என்பதே உலகில் எல்லா மக்களும் பிறந்தார்கள்; வாழ்ந்தார்கள்; பின் மரித்தார்கள்; பூமியிலே அடக்கம் பண்ணப்பட்டார்கள்; அத்துடன் முடிந்தது என்று எண்ணுகிறார்கள்.

ஆனால் மேசியாவாகிய இயேசு கிறிஸ்துவோ, மரித்து அடக்கம் பண்ணப்பட்டு 3 ஆம் நாள் உயிரோடெழுந்து, 40 நாட்கள் இவ்வுலகத்தில் வசித்து தம் சீசர்களுக்கும், பக்தர்களுக்கும் தான் ஜீவனோடிருப்பதாக தரிசனம் கொடுத்தார். பின்பு பரலோகத்திற்கு போகும்போது, தம் சீஷர்களிடம் சீக்கிரம் பூலோகத்திற்கு திரும்பவும் வருவேன் என்று வாக்களித்து, உயரே வானுலகம் நோக்கி சென்றார்.

இயேசு கிறிஸ்து இவ்வுலகில் வாழ்ந்து உபதேசிக்கும் போது "நானே வழியும், சத்தியமும், ஜீவனுமாயிருக்கிறேன், என்னை விசுவாசிக்கிறவன் (நம்புகிறவன்) மரித்தாலும் பிழைப்பான். மறு வாழ்வு நித்யக் காலத்தில் என்னோடு நித்ய ஜீவனோடிருப்பான் என்றார். இதனால் மரித்தவர்களின் ஆவி அழிந்து போகவில்லை. அது ஓரிடத்தில் தங்கி இளைப்பாறிக் கொண்டிருக்கிறது.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மரித்து அடக்கம் பண்ணப்பட்டார். 3 நாட்கள் கல்லறைக்குள்ளிருந்தார். அப்போதும் அவர் ஜீவன் அழிந்து போகவில்லை. அவர் கிறிஸ்துவாகவேயிருந்தார். அப்போது அவர் மாம்சத்திலே கொலையுண்டு, ஆவியாலே உயிர்ப்பிக்கப்பட்டார். அந்த ஆவியாலே அவர் போய் காவலிலுள்ள (மோட்ச யுக காலத்தில் தண்டனைப் பெற்ற) ஆவிகளுக்கு உபதேசம் கொடுத்தார். 1பேதுரு 3:19-20. மேலும் நோவா காலத்தில் ஜலத்தினால் அழிந்து போன மண்யுக மக்களின் ஆவிகளுக்கும் உபதேசம் கொடுத்தார். மரித்தோரானவர்கள் (கொலை தற்கொலை, விபத்து, தண்டனை) ஆவியிலே பிழைக்கும்படி அவர்களுக்கும் சுவிஷேசம் அறிவிக்கப் பட்டது. 1 பேதுரு 4:6. இப்படியாக தாழ்ந்தபாதாளத்தில் சுவிஷேச நற்பணி கிறிஸ்துவினால் நடைப்பெற்றது சங் 86:13.

இயேசு கிறிஸ்து இவ்வுலகத்திற்கு திரும்ப வருவார் என்பதற்குச் சில அடையாளங்களைச் சொல்லி போயிருக்கிறார். மத்தேயு 24:32 ல் "அத்திமரத்தினால் ஒரு உவமையை கற்றுக்கொள்ளுங்கள், அதிலே இளங்கிளை தோன்றி, துளிர் விடும் போது வசந்தகாலம் சமீபமாயிற்று என்று அறிவீர்கள்" என்றார். அத்திமரம் என்பது இவ்வுலகத்திலுள்ள யூத குலத்தை குறிக்கும். இவர்கள் எருசலேமில் தங்கி இராஜ்யபாரம் நடத்தும் போது, கிறிஸ்து திரும்ப இவ்வுலகத்திற்கு வர ஆயத்தமாகிவிட்டார் என்பது உறுதியாகிறது.

மேலும் புற (மற்ற) ஜாதியார் காலம் நிறைவேறும்
வரைக்கும் எருசலேம் நகர் புற ஜாதிக்காரரால் மிதிக்கப்
படும் என்று கிறிஸ்து லூக்கா 21:24-ல் சொல்லியிருந்தபடி
யூதரால் புற ஜாதியராகிய அரபியர்களுக்கு கி.மு 135
முதல் கி.பி 1920 வரைக்கும் எருசலேம் திரு நகரத்தைக்
கொடுத்திருந்தார். புற ஜாதியரின் காலம் 1948 உடன்
முடிந்தது. யூதர் இராஜ்யம் பெற்று எருசலேமைத் தலை
நகராகக் கொண்டு அரசாட்சி செய்து வருகிறார்கள்.
இதனால் சீக்கிரத்தில் கிறிஸ்து இப்பூலோகத்திற்கு வருவார்

என்பது நிச்சயமாயிற்று. யூதரின் முன்னேற்றமும் இராஜ்ய பாரமும் வளர்ந்து கொண்டே வருகிறது என்பது தெளிவு.

கிறிஸ்து வருவதற்கு முன் இவ்வுலகில் மகா பூமியதிர்ச்சிகளும், நிலநடுக்கங்களும், நிலவிரிவுகளும், பஞ்சங்களும், கொள்ளைநோய்களும் உண்டாகும். வானமண்டலத்திலிருந்து பயங்கரமான தோற்றங்களும், பெரிய அடையாளங்களும் உண்டாகும். இதன் பின்பு கிறிஸ்துவும், அவருடைய தூதர்களும் மத்தி வானத்திலே தோன்றுவார்கள். அப்பொழுது நீண்ட தொனியாகிய எக்காளம் ஊதப்படும் க்ஷணப்பொழுதில் மரித்து அடக்கம் பண்ணப்பட்ட பரிசுத்தவான்கள் யாவரும், அத்தொனி கேட்டு ஆவியின் சரீரத்தோடு உயிரோடெழுந்திருப்பார்கள், அந்நேரமே உயிரோடிருக்கும் பரிசுத்தவான்கள் யாவரும் க்ஷணப் பொழுதில் மறுரூபமாவார்கள். இவர்கள் யாவரும் கிறிஸ்துவோடு பரலோகம் செல்வார்கள். இதுவே முதலாம் உயிர்தொழுதலாகும்.

## நீதியின் அரசாட்சி

இதன் பின்பு கிறிஸ்துவும், அவருடைய தூதர்களும், பூலோகத்திலிருந்து பரலோகஞ் சென்ற பரிசுத்தவான்களும், திரும்பவும் பூலோகத்திற்கு வந்து, 1000 வருஷம் இப்பூமியில் ''நீதியின்'' அரசாட்சி செய்வார்கள். அப்பொழுது யூதர்கள் (கிறிஸ்துவை கொலை செய்த குலத்தார்) கிறிஸ்துவைப் பற்றி சாட்சி பகர்வார்கள்.

இதன் பின்பு இவ்வுலகில் நியாயத்தீர்ப்பு நடைபெறும். மரித்தோர் யாவரும் உயிரோடெழுந்திருப்பார்கள். நீதிமான்கள் (கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டவர்கள்) கிறிஸ்துவின் வலப்பக்கத்திலும் கிறிஸ்துவை ஏற்று கொள்ளாதவர்கள் ( அக்கிரமக்காரர்கள் ) இடப்பக்கத்திலும் நிறுத்தப்படுவார்கள். இடப்பக்கத்திலுள்ளோர், சாத்தானால் வஞ்சிக்கப்பட்டு, ஏமாற்றப்பட்டு கெட்டுப் போனவர்கள். இவாகள் யாவரும், சாத்தானுடனும், அவன் தூதர்களுடனும் நித்ய அக்னிக் கடலுக்குள் தள்ளப்படுவார்கள்.

அங்கே அக்னி கோஷ்டம் கவலை, வருத்தம், துன்பம், சஞ்சலம் இவைகளால் நித்திய நித்திய காலமாய் துன்பப்பட்டுக் கொண்டேயிருப்பார்கள்.

## நித்ய வாழ்வு

கிறிஸ்துவின் வலப்பக்கத்திலுள்ளோர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுடன் "நித்ய மறுவாழ்வு" யுகத்திற்குள் செல்வார்கள். அங்கு எப்பொழுதும் சந்தோசம், சமாதானம், மகிழ்ச்சியாகவே இருக்கும். தேவ தூதர்களைப் போல தேவனோடு உரையாடிக் கொண்டு மகிழ்ந்திருப்பார்கள். கவலை, வருத்தம், துன்பம் கிடையாது. கிறிஸ்துவுடனே கூட பேரின்ப வாழ்வில் நிலைத்திருப்பார்கள்!

## பிரார்த்தனை

தேவனாகிய கர்த்தாவே! உமது ஊழியனாகிய என்னை ஆட்கொண்டு, உமது திருமறையின் ஒளியினால் இப்பூமியின் யுகங்களையும், உலகங்களையும் பகுத்தறிந்து எழுதக் கற்பித்தீரே! மிக நுண்ணறிவுள்ள அடியேனைக் கொண்டு, நீர் வெளிப்படுத்திய இப்பூமியின் நிலைகளை (யுகம், உலகம்) மக்கள் அறிந்துக் கொள்ளவும், உம்மைப் பற்றிய நம்பிக்கையில் நிலை நிற்கவும், நித்திய மறுவாழ்வைப் பெற்றுக் கொள்ளவும் கிருபை செய்தீரே!

இதற்காக நன்றியறிதலோடு உமது நாமத்திற்கு கோடா கோடி ஸ்தோத்திரங்கள் செலுத்தி, அடியேன் உமது பாதம் பணிந்து, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மூலமாய் இறைஞ்சி நிற்கின்றேன். பிதாவே! ஆமென்



## அன்பு வாசகர்களுக்கு ஓர் வேண்டுகோள்

இந்த புத்தகத்தை வாசித்து மகிழ்ந்திருப்பீர்கள் என நம்புகிறேன். இப்புத்தகத்தின் கிரயத்துடன் தங்களால் இயன்ற நன்கொடையும் அனுப்பி தொடர்ந்து இவ்வூழியத்தை ஆதரிக்க அன்புடன் வேண்டுகிறேன்.

—ஆசிரியர்

## விரைவில் எதிர் பாருங்கள்!

1 ஜீவனுள்ள தேவனுடைய பிள்ளைகளாகிய எப்ராயீமரின் சம்பூர்ண வரலாறு

2 இந்தியாவிற்குள் கிறிஸ்துவின் ஒளி.

3 இயேசு கிறிஸ்துவின் வருகை எப்போது?

தொடர்பு முகவரி.—

S. இராஜாமணி
L, 284; அன்பு நகர்
மகாராஜ நகர் (P. O)
நெல்லை - 11.

கிடைக்குமிடம் :-

1 டயோஷிசன் புக் டெப்போ,
பாளையங்கோட்டை,
நெல்லை - 2.

2 பைபுள் புத்தக நிலையம்,
21, திருவனந்தபுரம் ரோடு,
முருகன் குறிச்சி, நெல்லை - 2.

3 R S. Jeyabala Singh,
கதீட்ரல் மேல் நிலைப் பள்ளி,
பாளையங்கோட்டை, நெல்லை - 2.

4 பைபுள் புக் கிளப்,
40, லங்கர் கானா தெரு,
பாளையங்கோட்டை, நெல்லை - 2.

5 S. இராஜாமணி,
L, 284; அன்பு நகர்,
மகாராஜ நகர் (P. O)
நெல்லை - 11.

சி. எம் எஸ். அச்சகம், பாளை. போன் 576436.